உ
சற்குருவே நம:

# ஆத்மயோக ஸங்க்ரஹம்.

இஃது
திருவண்ணுமலையி லெழுந்தருளியிருக்கும்
ஸ்ரீ சற்குருசுவாமி அவர்களால்,
இயற்றப்பெற்றது.

ஷையார் மாணுக்கரும்
நாகபட்டணத்திலிருக்கும் தஞ்சாவூர்
நா. கதிர்வேற்பிள்ளை அவர்களால்,
நாலாங்கட்டளை
அ. பக்கிரிஸாமிவைத்தியர் அவர்களின்
பொருளுதவியைக்கொண்டு

நாகபட்டணம்
ஸ்காட்டிஷ் பிராஞ்சு பிரஸில்
பதிப்பிக்கப்பெற்றது
ரௌத்திரி௵—1920.



திருவண்ணமலையில் எழுந்தருளியிருக்கும்
ஸ்ரீ ஸத்குருஸ்வாமிகள்.



உ

ஸ்ரீ சற்குருவே நம:

## கடவுள் வணக்கம்.

ஆதிசக்தி ஆனை முக பாலே காப்பு
நீதிகற்றநான் முகனும் வாணி காப்பு
பூதிபெற்ற அரிஅர மகேசுரன் காப்பு
சோதியுற்ற சதாசிவனும் மனோன்மணியுங் காப்பாம்.

## குருவணக்கம்—விருத்தம்.

சத்திய பரிபூரண சதானந்த வாரியில் சித்தபரிபாகமாய்
சுத்தமாய் நித்தியமாய்
தத்வபரி போதமாய் யத்துவித வஸ்துவாய் வேதாந்த
சித்தாந்த சமரச சமானமாய்
ஆதிமத் தியாந்தமாய் ஆத்தியந்த சூன்யமாய் சோதியா
யேகமாய் ஏகாந்த ரூபமாய்
பூதங்களைந்தும் பொறிகரணமற்ற பரஞானவானந்த
குருபதமலரை வணங்குவாம்

அப்பனுடையடி மலரை யெப்பொழுது மாதரவாய்
தப்பாத மனனமதே தப்போத மானபடி
இப்பாவி செய்வதேது முப்பாழு மூவுலகம்
பொற்பாத மாதரவில் அன்பாய் வணங்குவாம்

## விருத்தம்.

கண்ணா ரிருந்த குருகண் ணாலேகண்டபடி
மண்ணாசை பெண்ணாசை பொன்னாசை சாம்பலாய்
எண்ணாத எண்ணமது விண்ணாதி பூதமிதை
அண்ணா உமக்கடிமை அன்பாய் வணங்குவாம்

நிஷ்காம சர்க்கர்ம்ம சன்மார்க்க தெரிசனம்
சற்பக்தி விச்வாச சற்குரு தெரிசனம்
சர்வேச லோகேச சர்வாத்ம தெரிசனம்
சத்துசித்து ஆனந்த சம்பூர்ண தெரிசனம்
சித்தம் சிவாயமாய் சுத்தபர தெரிசனம்
சுத்தபரி பூரண சுகாநந்த தெரிசனம்
தத்துவமசி சாமான்னிய சந்தோஷ தெரிசனம்
சமரச சதாநந்த சற்குரு தெரிசனம்.



ஸ்ரீ சற்குருவே நம:

# ஆத்ம யோக சங்கரகம்.

பெந்த மென்பதும் மோக்ஷ மென்பதும், ஆத்மாவுக்கோ சரீரத்துக்கோ என்று மனம் கேட்க, அறிவு கூறியது. ஓமனமே! கேள், இவ்வுலகத்தின் கண் ஜீவர்களுக்கு பெந்தமென்றும் மோக்ஷமென்றும், இரண்டுவிதமாக சுருதி ஸ்மிருதி வேத சாஸ்திர புராண இதிகாசாதிகளில் கூறியிருக்கிறது சத்தியம்; ஆனாலும் அது பாமராளுக்கு பிராகிர்த கர்ம பெந்தம்விட்டு கிருதார்த்தமாகும்பொருட்டு உபாயமாகச் சொன்னதல்லாமல், சூக்ஷமத்தில் எதார்த்தமல்ல என்று மகாத்மாக்களும், உபநிஷத்துக்களும், கூறியது சத்தியம். ஆனாலும் ஜீவர்களுக்கு பெந்த மோக்ஷ மிரண்டும் மெய்யாக தோற்றுவது ஸ்வபாவம். அப்படி மெய்யாக தோற்றுவதற்கு காரணம் மாயை. மாயையானது இரண்டுவிதம். வித்தை அவித்தை என்கிற நாமத்தோடு கூடியும், சுத்தம் அசுத்தம் இந்தப்படி இரண்டிரண்டுவிதமாயும், அநேகமாகும் இவைகளில் வித்தையானது பெந்த நிவர்த்தி. அது மோக்ஷகாரணமென்க; அவித்தையானது சம்சாரம்; அது பெந்தகாரணமென்றும் பெரியோர்கள்

சம்மதம். மோக்ஷமாவது, ஜாக்கிரதையாய் உணர்வதுதான். பெந்தமானது போகம்; அதுசொற்பனமாய் உறங்குவதாம். ஆதலால் தேகேந்திரியாதி விடயங்களில் ஆசை யிருந்தமட்டும் ஜீவன் பெந்தனும் என்றும் அறிக; இதுகளை எல்லாம் அடக்கி மனோசுகயான விடய சுகத்தை தூரத்தள்ளிவிட்டு, மனம் பரிசுத்தமாகி, ஆத்மசுகத்தில் பிரியமானால் ஜீவன் பெந்தம் விட்டு முத்தனுமென்று அறிக. மனோசுகமானது பூமிமுதல் நாதம் வரையில்; அதுகளெல்லாம் ஒருகாலத்தில் நாசமடையுமாதலால் அதுகள் சத்தியமுமல்ல, நித்தியமுமல்ல; மித்தையாமென்றறிக. ஆத்ம சுகமானது நாதாந்தமாயும், சத்தியமாயும், நித்தியமாயும், உள்ளது. அதானது ஆதி மத்தியாந்த மற்றதாயும், நிர்வாணமாயும், பிர்மாநந்தமாயும் உள்ள தர்ம பரமாத்மாவென்றும் அறிக. ஆதலால் பெந்த மோக்ஷ மிரண்டும் உள்ளதாகத் தோற்றுவதற்கு காரணம் அவித்தை. இதற்கு சந்தேகம் வேண்டாம். அவித்தையின் சுரூபமானது இராகத் துவேஷாதி அபிமான விர்த்திகளோடு கூடிய தேகேந்திரியாதி போகசுகத்தைப் பற்றியிருந்த சித்தம் ஒன்றுதான் அவித்தையின் சுரூப மென்றறிக.

இனி வித்தையின் சுரூபமாவது:—மேற் கூறிய ஆசையை விட்டு வைராக்கியத்துடன் ஒரு ஞானுசாரியரை யடுத்து நிராசையாய் பாதுகாத்து பணிவிடை செய்து, அருள் பெற்று, ஆநந்தமாய் ஆத்ம சுகம் அடைவதுதான் வித்தையின் சுரூபமென்றறிக. அதாவது மாயா குண சங்கல்ப மற்று மனம் பரிசுத்தமாய் சாந்த குண மடைந்தால் பெந்த நிவர்த்தியாம். ஆசைதான் பெந்தத்திற்கும் சம்சார துக்கத்திற்கும் நாகத்திற்கும் காரணம், வேறில்லை என்பது சத்தியம். ஆதலால் ஆசைதான் ஜீவபாவனை; ஆசையற்றுல் ஜீவபாவனை நசிக்கும்; ஜீவபாவனை நசித்தால், அனர்த்த நிவர்த்தியாம். அனர்த்த நிவர்த்தியானுல், ஆனந்தம் மேவிடும. இதற்கு முக்கிய காரணம் மன சாந்தம் ஒன்றேயாம், வேறில்லை. சாந்த மனதின் சுரூபம் எட்படியெனில், ராகத் துவேஷாதியபிமானங்கள் அற்றதாயும், சுத்த சாத்வீகமாயும் உள்ளதாம். சுத்த சாத்வீகமானது சாாசரத்துக்கும் அந்தரியாமியாயும், அபேதமாயும் ஏகமாயும் மதாரகிதமாயும் உள்ள ஆத்மாவில் பரிபூரணுநந்தமாயிருப்பதுதான் சாந்த குண விர்த்தி என்றும்,

வைஷ்ணவம் என்றும் அறிக. இனி சைவ சமயமாவது, மகா சாந்தமாய் துரிய பரமாய், பரிபூரணனந்த பரஞ்சோதியாய், அபேதமாய், மதரகிதமாயிருப்பதுதான், சைவ சமயம் என்றறிக. இதைத் தவிர, அனேக மதாசாரங்களிருந்தாலும் இதே தெய்வம் எல்லோருக்கும், வேறில்லை; இதுகள் இரண்டிலொரு மதத்தை நம்பி யிருந்தாலும், இதர மதத்தை தூஷித்தால், தன் தெய்வத்தை தூஷித்ததாய்விடும். அதனுல் நரகமே பலனும், சந்தேகமில்லை. அதுவுமல்லாமல் பகவான் சர்வக்ஞராயும், சர்வாந்திரியாமியாயும், சர்வ சாக்ஷியாயு மிருப்பதாதலால், ஒரு பிராணியை கொல்லாமலும், தூஷியாமலுமிருப்பதுதான் ஜீவகாருண்ணியம் என்றும், சாத்வீக விருத்தி என்றும், மோக்ஷ மார்க்கத்திற்கு முதல் பூமி என்றும், மகத்துக்கள் சம்மதம். ஆதலால் இவை இரண்டில் ஏதாகிலும் ஒரு மதத்தை விசுவாசமாக நம்புவானுனல் சற்குருவின் தெரிசனமாகும். சற்குருவினிடத்தில் அன்புற்று கண்டுபெற்றி விசுவாசமாக சேவிப்பதாம் மதாசாரகிரமம்.

இப்படிக்கொத்த மதாசாரகிரமங்களை கைவிடக்கூடா; கைவிடுமோனால் அதோ கெதியடைவார்கள். அதானது ஸ்ரீ சற்குரு பக்தியில்லாமல் மதாசாரியர்களை நம்பி ஆசாபாசத்தினால் கட்டுப்பட்டு சம்சார சாகரத்தினடுவில் ஆழ்ந்து கிடப்பவர்கள் அஞ்ஞானத்தினால் மதகெர்வமடைந்து, ஈசுரனையும் சாதுக்களையும் குற்றம் குறைவு பேசி திரிபவர்களுக்கு முடிவில் ரௌரவாதி நரகமாம் வீடு என்றும் வேதசாஸ்திர புராண இதிகாசங்களில் கூறியிருக்கிறது சத்தியமாதலால், அபேதமாயுள்ள மகத்துக்களையடுத்து அவித்யாமானமாயுள்ள அசுத்தமாயையும், அஞ்ஞானத்திற் கேதுவான கோர மூட விருத்திகளை அடியோடே தூரத்தள்ளிவிட்டு, நல்ல சாந்த குணமடைந்தால் பேரின்பமான பெரிய வீடடைந்து, பிர்மானந்தமாயிருக்கலாம், சந்தேகம் வேண்டாம். முன் கூறிய வைஷ்ணவம் சைவம் இதுகளில் விஷ்ணுவின் சுரூபமாவது விஸ்வரூபமாயும் விஸ்வாத்மாவாயும் விஸ்வசாக்ஷியாயும் விஸ்வம் பரனுயும் விஸ்வகாரணமாயும் சாசுவதமாயும் அவியக்தமாயும் சண்மோகவாரிதியாயும் சர்வ வியாபகமாயும் சாந்தகுணமாயும் மத

ரகிதமாயும் சப்தமாத்திரமாயும் சர்வ பரிபூரண சச்சிதாநந்த சுரூபமாயும் நித்திய நிஷ்கள நிர்மல சுயம்பிரகாசமாயும் விளங்குவதுதான் ஸ்ரீ மகா விஷ்ணு நாராயணமூர்த்தியின் சுரூபமென்றறிக.

சிவரூபமாவது விஸ்வநாதனுயும் விஸ்வரூபமாயும் பசுபதியாயும், நிர்மோகவாரிதியாயும், சாந்தமாயும், மாயாகுண ரகிதமாயும், நித்திய நிஷ்கள பரம ஜோதியாயும், அபேதமாயும், மதரகிதமாயும், சர் வாந்திரியாமியாயும், சர்வபரிபூரணமாயும், துரியமாய் அதீதமாயும், நிர்மல ஆகாசம்போல் மும்மலங்களு மற்று நிர்மலமாய் ஏகமாய் நிர்விகர்ப்பமாய் விள ங்குவதுதான் சிவபெருமானென்றும் அறிக. இவை களில் வைஷ்ணவ மதாசாரமாவது—துர்ச்சங்கப் பழக்கமும் துர்க்குணங்களையும் விட்டு நல்ல சற் சங்க பழக்கமும் சாப்திக விருத்தியும், கெங்கா ஸ்நாநம் செய்வதும், பகவத் கீதை பாராயணம் செய்யவும், காயத்திரியை படிக்கவும், துளசி மணியை தரிக்கவும், கோபியை திரிபுண்டரமாக தரிக்கவும், சந்தனம், துளசி பத்திரம், சாளக் கிராமபூஜை, எகாதசி விரதம், நாம ஜெபம் அஷ்டா

க்ஷர முதலான பகவன்நாம ஜெபங்களை செய்யவும், ஆசாரிய சேவை செய்யவும், இத்தகைய சாப்தீக யான சற்கருமங்களைச் செய்வதுதான் வைஷ்ணவ மதாசார மென்றறிக.

இனி சைவ மதாசாரமாவது முன்கூறினபடி துர்ச் சங்கமும் துர்க்குணங்களையும் விட்டு நல்ல சற்சங்க பழக்கமும் சாப்தீக விருத்தியும் சிவநாம ருத்தி ராக்ஷமும் ஜெபமணி வலங்கையிலும் கெங்கா கீதா கெங்காஸ்நானம் செய்யவும் ருத்திர கீதை படிப் பதும் காயத்திரியை ஜெபிப்பதும் வில்வ பத்திரம் விபூதி திரிபுண்டரமாகத்தரிப்பதும் சந்தனம் சாலக் கிராமபூஜை பிரதோஷம் சிவராத்திரி முதலான விரதங்களை அநுஷ்டிக்கவும் பஞ்சாக்ஷரம் அஷ்டா க்ஷர முதலான நாம ஜெபங்களைச் செய்யவும் இத்த கைய சாப்தீக குணமான சற் கருமங்களை செய் வதுதான் சைவ மதாசார மென்றறிக. இந்தப்படி செய்து பழகி வருமானல் இராசச அகங்காரமும் தாமச அகங்காரமும் அடியோடே நசித்து நல்ல சாப்தீக மேலிடும். சாப்தீக மேலிட்டால் நல்ல சற்குரு கிடைக்கும். சற்குரு கிடைத்தால் சர்வ

தர்மமும் விட்டு ஸ்ரீ சற்குருவை யடுத்தருள்பெற்ற பின் சாப்திக அகங்காரமும அடியோடே நசிக்கும். சாப்திக அகங்காரம் நாசமானல் மும்மலங்களு மறும். மும்மலங்களு மற்ருல் அருள்பெற்ற மலா நந்தமாய் ஜீவன் முத்தியடையலாம், சந்தேகமில்லை.

மனம், ஓ சுவாமி! இப்படிக்கொத்த ஜீவன் முத்தி யானது எல்லோருக்கும் பொது. அங்ஙனம் நிர்க் குணமாயும் கேவலமாயும் அவியக்தமாயுமுள்ள பரமாத்மாவிலிருந்தும் சுவியக்தமாயும் சற்குண மாயுமுள்ள மாயாசத்தியானது எப்படி யுண்டான தென்று கேட்க அறிவு கூறியது, ஓ மனமே! கேள். நிற்குணமாயும் பரிபூரணமாயுமுள்ள பரமாத்மாவி லிருந்தும் சற்குணமானது எப்படி வந்தென்றும் குரு சுருதியுக்தி அனுபோகத்தினுல் யோசிக்குங் கால் மனசங்கல்ப விகல்பமல்லாமல் ஆத்மா வைத்தவிர மாயையானது அணுமாத்திரமானலும் வேறேயில்லை என்பது நிச்சயமாம். இந்த மாயமறி வது மகாபிரயாசமானலும் ஸ்ரீ சற்குருவின் திரு வருளால் அறியக்கூடியதுமாம். அதானது குரு வருள் பிராதகாலத்து ஞானசூரியன் உதயமானல்

அஞ்ஞானத்தால் தோற்றுவதான மாயாந்தகாரம் அடியோடே நசித்து தத்சுரூபம் விளங்கு மென்பது நிச்சயம். சத்தியமே நித்தியம் நித்தியமே சத்தியம். இதை உண்மையாக நம்புமானால் மனம் பரிசுத்த மாகும். இதைத்தவிர அசுத்தமாயையின் லெக்ஷண மாவது சத்தியம் அசத்தியமாயும் அசத்தியம் சத்தியமாயும் தோற்றிவைப்பதுதான் அசுத்தமாயை யின் சுபாவீகம். அசுத்தமாயை நாசமானால் சுத்த மாயை பிரகாசிக்கு மென்பதற்கு சந்தேகம் வேண் டாம். சுத்தமாயை கைவசமானால் அதிலிருந்தும் பரமாத்மாவை பார்க்கலா மென்பதற்கு சந்தேக மில்லை. எவர் இந்தப்படி சற்குருவினிடத்தில் சிரத்தாபக்தி விஸ்வாசத்துடன் பரமாத்மாவை உபா சிப்பார்களோ அவர்களும் அப்படியே பரமாத்ம சுருபமாகுமென்பதற்கு சந்தேகமில்லை, இதுசத்தியம்.

ஓ மனமே கேள். சரீரமானது அநித்தியம் அதானது ஜடதுக்கம். சர்வபூதங்களுக்கும் அந்திரி யாமியாகிய பரமாத்மாவானது நித்திய சுகமானாலும் சாந்த கோரமூட விர்த்திகளாய் சம்சாரசாகரத்தி னடுவிலாழ்ந்து கிடந்தலையும் துக்கிகளான ஜனங்கள்

பரமாத்மா பரமாத்மாவென்றும் அடிக்கடி வாயினல் பேசிக்கொண்டு திரிந்தாலும் பரமாத்மாநுபவம் வாராதென்பது நிச்சயம். அந்தக்கரணம் பரிசுத்தமாகி ஸ்ரீ சற்குருவின் திருவருள்பெற்ற மகான்கள் பரமாத்மாவென்ருெருதரம் நினைந்தால் போதும். பிர்மானந்தமாயிருக்கும் சந்தேகம் வேண்டாம். ஜெனகராஜன் மாபலி சக்கரவர்த்தி முதலான பேர்கள் இல்லறஞானிகளாயிருந்தும் நித்திய கைவல்லிய பத மடைந்தார்களென்றும் சில சாஸ்த்திரங்களில் கூறியிருக்கிறது. இவர்களில் பூலோக சக்கரவர்த்தியான ஜனகர்பற்றற்றிருந்தும் ராஜ்ஜியபாரம் செய்தவாறு நானெனதென்கிற அகந்தையும் மமதையும் தூரதள்ளிவிட்டு நானிந்த பூமிக்கு பதியல்ல பூமிக்கு பதியானர் சாக்ஷாத் பரமாத்மா ஒருவரேயாம். பரமாத்மாவானது சர்வபூதங்களாயும் சர்வபூதாந்திரியாமியாயும் சர்வ சாக்ஷியாயும் சச்சிதானந்த சுரூபமாயும் விளங்குகின்ற கடவுள் ஒருவரே சர்வ ஜெகத்பதி, நானல்ல நானல்ல என்பது சத்தியம். ஆதலால் நான் இதற்கு கர்த்தாவல்ல வென்று பாவித்து சற்குருபக்தி விஸ்வாசத்துடன் இல்லறத்திருந்தும் ராஜ்ஜியபாரம் செய்தும் தாமரையிலையில்

தண்ணீர்போல் பற்றியும் பற்றற்று ஜீவன் முத்தரா யிருந்தும் வேதாந்த நித்திய கைவல்லிய பதம் அடைந்தார்களென்பது உண்மை. இனி மாபலி சக்கரவர்த்தியானவர் மூவுலகத்துக்கும சக்கரவர்த்தியாயும், இல்லறஞானியாய் சம்சாரத்திலிருந்தும், மோக்ஷமடைந்தார்களென்பது பின்வருமாறு காண்க.

அங்ஙன மெப்படியெனில் மூவுலகத்திற்கும் கர்த்தா நானென்கிறபாவனையோடு கூடியும் ராஜ்ஜியாதிகாரம் செலுத்திவரவே விஷ்ணுபகவான் கிருபாநிதியாய் வாமனவேஷமாய் மூன்றடி பூமியை கேட்டதர்க்கு மூன்று லோகத்தையும் இரண்டடியாக கைக்கொண்டு மூன்றடி கொடுக்கலாயென்று சொன்னதில் ஓரடி குறைவாய் இருந்ததினுல் நாகபாசத்தால் கட்டப்பட்டும் நானென்னதென்கிற அகந்தையும் மமதையும் போக்கடித்து பரிசுத்தமாக்கி மோக்ஷம் கொடுத்தாரென்பது நிஜம். அதுபோல் யாராலும் இல்லறத்தில் சம்சாரத்தோடொத்திருந்தும் தாமரை இலைமேல் ஜலம்போல் பற்றற்று அகங்காரமும் அபிமானமுமில்லாமல் ஸ்ரீ சற்குருபக்தனுய் அன்புற்று சேவித்து பழகி வருவதானல் அருள்

பெற்று அமலானந்தமாய் நித்திய கைவல்யபதம் அடையலாமென்பது தார்ப்பரியம். இதைத்தவிர சன்னியாசியானாலும் ஸ்ரீ சற்குருபக்தி இல்லாமலும் அருள்பெறாமலும் அநேக ஞான நூல்களை வாசித்து முகபாடம் செய்து பிரசங்கம் செய்தாலும் மலட்டு பசுவுக்கு தீனிபோட்டால் பால் அகப்படாதென்பதுபோல் ஆத்ம சுகம் வாராதென்பது நிச்சயம். மனம் அகங்காரத்தை போக்கும் மார்க்க மெதுவென்று கேட்க அறிவு கூறியது.

ஓ மனமே! கேள். அகங்காரத்தைபோக்கடிக்கும் உபாயம் சுலபமாய் ஓர் மார்க்கமுண்டு. எப்படி எனில் ஓர் ஞான தேசிகரையடுத்து உபதேசமாக பக்தி விஸ்வாசத்துடன் பஞ்சாக்ஷரதியானம் செய்து பழகி வருவதானல் அகங்காரம் அடியோடே நசிக்கும். அதானது மூலப்பிரகிருதிமுதல் பூமிவரையுள்ள சராசரபிரபஞ்ச வஸ்துக்களும் பஞ்சாக்ஷரத்திலடங்கி இருக்கிறது ஆதலால் அகங்காரத்தை பஞ்சாக்ஷரத்திலடக்கி பஞ்சாக்ஷரதியானம் செய்தால் பஞ்சாக்ஷரத்தைதவிர அகங்காரமானது அணுவளவுமில்லை என்பது சத்தியம். அப்படிக்கொத்த பஞ்சா

க்ஷரத்தின் மகிமையை ஆயிரம் நாவுடைய ஆதி சேஷனாலும் வாகீஸ்வரியாலும் புகழ அசாத்தியம் ஆனாலும் அடியேன் அறிந்ததை அறைகுவேன் கேள். பஞ்சாக்ஷரமே விஸ்வரூபம். பஞ்சாக்ஷரமே விஸ்வ காரணம். பஞ்சாக்ஷரமே விஸ்வாத்மா. பஞ்சாக்ஷரமே விஸ்வ வியாபிகம். பஞ்சாக்ஷரமே விஸ்வ சாக்ஷி. பஞ்சாக்ஷரமே பரபிர்ம்ம சுரூபம். ஆதலால் பஞ் சாக்ஷரத்தைத்தவிர நான் என்கிறதும் பொய். நா னென்கிறது பொய்யானால் நீ என்பதும் பொய். நானும் நீயும் இல்லாவிட்டால் எனதென்பது அணு வளவு மில்லை என்பது சத்தியம். ஓமனமே! அஞ் செழுத்துக்குள்ளே நின்னை நீ பார்க்குமானால் அஞ் செழுத்தும் உனக்குள்ளே விளங்கும். அஞ்செழுத் தும் உனக்குள்ளே விளங்குமானால் உன் உள்ளம் சுயம் பிரகாசமாய் விளங்கும். உள்ளம் சுயம்பிர காசமாய் அன்புற்றுபார்ப்போமானால் உனக்குள்ளே அகிலாண்டமும் பார்க்கலாம். அகிலாண்டத்துக் குள்ளே நின்னையும் பார்க்கலாம். இந்தப்படி சமரச மாய் பார்க்குமளவில் நானென்கிற அகங்காரமேது

ஆனாலும் உலகத்தின்கண் அஞ்ஞானத்தினால் தோற்றும் அகங்காரமானது அவித்தியாமானமாயுள்ள அசுத்தமாயையின் சுபாவீகம். அதானது மித்தையாமென்றறிக.

ஓ மனமே கேள்:—பஞ்சாக்ஷரமே பிரணவ சுரூபம். பஞ்சாக்ஷரமே மாயை. பஞ்சாக்ஷரமே ஜீவன் பஞ்சாக்ஷரமே, மூன்று குணம் பஞ்சாக்ஷரமே, பஞ்ச பூதம். பஞ்சாக்ஷரமே உலகம். பஞ்சாக்ஷரமே சரீரம். பஞ்சாக்ஷரமே பஞ்ச மூர்த்தி. பஞ்சாக்ஷரமே சர்வ சராசரமும். இந்தப்படி ஏகமாயுள்ள சிவத்துக்குள் ஜெகஜீவபரம் அடங்கியிருக்கிறது. ஜெகஜீவபரத்துக்குள் ஏகமாயுள்ள பரமசிவன் பரிபூரணமாய் விளங்கியிருக்கிறது. ஆதலால் பஞ்சாக்ஷரத்தை பெற்றது பரிபூரணமாயுள்ளது பிரணவம் பரிபூரணமாயுள்ள பிரணவத்தை யறிவது பஞ்சாக்ஷரம். ஆதலால் மனம் பஞ்சாக்ஷரத்தில் கலந்து பரிசுத்தமாய் தெளிவடைந்தால் ஏகமாய் பிரணவ சுரூபமாய் விளங்கியிருக்கும். பிரணவ சுரூபமானது குரு பிரணவ யுக்தமாய் அதை அருளாலறிவது அகரம்

அகாரத்துக்கு மூலம் பிரணவம் அகாரம் பெற்றதாம் அஞ்செழுத்து. அஞ்செழுத்தானது பஞ்சமூர்த்தியுமாம். பஞ்சமூர்த்தியானது பிர்மா விஷ்ணுருத்திரன் மகேஸ்வரன் சதாசிவம். இதுகளில் ஜீவர்களை பெற்றது, பிர்மா, வளாப்பது விஷ்ணு, காமத்தை சங்கரிப்பது ருத்திரன், திரோபவமாய் மறைந்திருந்தது மகேஸ்சுரன், அருளால் தெளிந்திருந்தது சதாசிவம். இப்படிக்கொத்த பஞ்சமூர்த்தியை ஏகமாயுள்ள பிரணவ சுரூபத்தோடு ஐக்கியமாய்ப் பார்ப்பது தான் மோக்ஷம்.

ஓ மனமே கேள்:—ஜீவாத்மாவினை பிரணவ சுரூபமான பரமாத்மாவில் ஐக்கியமாகும் பொருட்டு, முன் கூறினபடி ஜெக ஜீவ பர மூன்றும் பிரணவத்துக்குள்ளே அடக்கி பார்க்கு மளவில் ஆத்மா ஏகமாயும் அகண்டபரிபூரண சச்சிதாநந்த சுரூபமாயும் சுயம்பிரகாசமாயும் விளங்குவதுதான் ஐக்கிய மென்றறிக. ஓமனமே இன்னுங்கேள்: ஐக்கியமாகும் பொருட்டு உபாயம்—இருதய கமலத்தின் கண் அதோ முகமாயும் அனாத்ம வஸ்துக்களில் பிரியமாயுமிருந்த ஜீவனை திருப்பி அந்தக்கரணம் பரிசுத்தமாக்கி ஊர்த்தமுகமாய் ஆத்மாவில்

பிரியமாய் வாக்குமனக்காயங்களை அடக்கி மும் மலங்களைப் போக்கி அன்பாய் அருள்பெற்று ஆத்மா நந்தமாய் சர்வ பூதஙகளிலும் ஆத்மாவினையும் ஆத் மாவினிடத்தில் சர்வ பூதங்களையும் சமரசமாய் பார்த்து பரமாநந்தகுரு பக்தனுய், சுருதியுக்தி அனுபோகத்தினுல் தனுகாணுதிகளையும் மறந்து ஒன்றும் அறியாத சுழுத்தி அவஸ்தையைப்போல் துரிய பரிபூரண பரமாநந்த பரஞ்சோதியாய் விளங்கு வதாம் ஜீவபரம். ஜீவபரையோர்ரைக்கியமா மோக்ஷம், இந்தப்படி ஐக்கியமாய் மோக்ஷம் அடைவதல்லா மல். தானம் ஓமம் ஜெபம் தபம் விரதம் நியமசாங்கிய யோகாதிகளினுலும் அனேக வேதாந்த சாஸ்திர பாடங்களினுலும் மோக்ஷ மடைவது அசாத்தியம். மாயாகுண பேதத்தினுல் அனேக விதமான நாமரூப குணதோஷ பேதா பேதங்கள் அனேக னேகமாயிருந் தாலும் சர்வ வியாபகமாயும் சர்வாத்மாவாயும் சர் வக்கிஞுயும் சர்வ சாக்ஷியாயும் ஆகாசம்போல் சர்வ பரிபூரணமாயும் விளங்கும் பரமாத்மாவானது ஏகமாம். அதை ஸ்ரீ சற்குருவின் திருவருளால அரி வதுதான் பரக்கியான மென்றறிக. உதாரணம் மண்

ணுனது ஏகம். அதனால் அனேகவித பேதமான ஏன பாணுதிகளைப் போலவும், ஏகமாயிருந்த தங்கம் பல விதமான கடக கங்கணுதி ஆபரணங்களைப் போலவும், பசுவின் பாலானது ஏகநிறம்—பசுவானது பலவித மாயிருந்தது போலவும், ஆத்மாவானது ஏகம். சரீராதி பிரபஞ்ச வஸ்துக்களானது பின்னும் அதுகள் அனேகவித நாமரூபங்களாய் தோற்றுவது அவித்தை யின் சுபாவீகமென்று அறிக.

ஓ மனமே கேள்:—இந்தப்படி ஐக்கிய ஞான மடைந்து மோக்ஷமாகும் பொருட்டு முக்கியசாதனம் ஸ்ரீ சற்குருவினிடத்தில் அசஞ்சலமாயும், அகங்கிய மாயும், அன்பாயுமுள்ள ஏகாந்தபக்தி விஸ் வாசம் ஒன்றேயாம்; ஏகாந்த பக்தியானது ஜெக ஜீவ பர சிவம் நான்கும் ஏகமாய்க் கண்டு உபாசிப்பதாம் ஏகாந்த பக்தி என்றறிக. ஓ சுவாமி! ஏகமாயுள்ள பரமாத்மாவிலிருந்தும் ஜெகஜீவபரம் வேருய் தோற்றுவது சுபாவீகம் ஆனுலும் இதுகள் மூன்றும் சிவதுரியத்தோடு ஐக்கியமாகி யிரண்டறக் கலந்து ஏகமாகும் மார்க்கம் அருளவேணுமென்று கேட்க அறிவுகூறியது:—

ஓ மனமே கேள்:—மாயாகுண சகிதமானது ஜீவன்; மாயாகுண ரகிதமானது சிவம், இதுகளில் மாயாகுண சகிதமானது சர்வ சராசர சுரூபமாம்; இதுகளுக்கெல்லாம் அந்தரியாமியாயிருந்தது ஜீவன்; ஆதலால் ஜெகமோகினிகளான மாயாகுணம் மூன்றையும் அருளால் அடக்கினுல், ஜீவாத்மாவானது மாயாகுண ரஹிதமான பரத்தோடு சேர்ந்து இரண்டறக் கலந்து பரமாநந்தமாய் சிவதுரியத்தோடு ஐக்கியமாய் அரியாதீதமாய் பரிபூரணமாயிருக்கும் பரமாத்மா; சந்தேகம் வேண்டாம்.

ஓ மனமே கேள்:—முன் கூறினபடி ஜெக சீவ பரசிவம் நான்காக தோற்றுவதற்கு காரணம் அஞ்ஞானம்; அஞ்ஞானம் நீக்கி ஜெக சீவ பரசிவம் நான்கும் ஏகமாய் பார்ப்பதை எதார்த்த ஞானமென்றறிக. மனசின் மாயாகுண சகித்வம் விட்டால் ஜீவனும் பரயானசிற்சத்தியும பரமாத்மாவான சிவதுரியமும் ஏகமாய் விளங்கி யிருக்கும், சந்தேகம் வேண்டாம். ஜீவனுக்கு மாயாகுண சம்பந்தம் உண்டாக்கியது மனம் ஒன்றேயாம், வேறில்லை. ஜீவனுக்கு மாயாகுண சம்பந்தம் ஒருகாலத்திலும் இல்லை. சத்தியமாய் விசாரிக்கும்போது ஜீவனுக்கு மாயாகுண சம்

பந்தமானது திரிகாலத்திலும் இல்லை என்பது நிச்சயமாய் அறிவது அருள் சத்தியாதலால், மனோலயமடைந்து, அருள் பெறும் வரையில், ஜீவபாவனையிருக்கும். மனம் சாந்தமானால் அருள் பெற்று சாசுதமான பரமாநந்த பதமடையலாம், சந்தேகம் வேண்டாம்.

மனம்:—ஓ சுவாமி! ஞான சாஸ்திரங்களில் வேதாந்தமென்றும் சித்தாந்தமென்றும் இரண்டு வகுப்பாக கூறியிருக்கிறது; இதுகளில் எது சிலாக்கியமென்று கேட்க, அறிவு கூறியது:—

ஓ மனமே கேள்:—வேதாந்தமென்றும் சித்தாந்தமென்றும் கூறப்பட்டது. இதுகள் இரண்டுக்கும் அந்தமான பரமாத்மா ஒன்றுதான்; ஆதலால் சமரச ஞானிகள் ஆத்மாவை ஏகமாய் அறிவார்கள்; வேதாந்த மென்பதற்குத் தாற்பரியம்:—வேதமானது நான்கு; நான்கு வேதத்திற்கும் அந்தமானது எதுவோ அதுவே வேதாந்தமெனப்படும். வேதமானது சப்த பிர்மம்; சப்த பிர்மத்துக்கு அதீதமானது நாதம்; ஆதலால், நாதபிர்மமே வேதாந்தமென்றும் அது பரமாத்ம வஸ்துவாமென்றும் அறிவார்கள்.

இனி சித்தாந்தமென்பதின் தார்ப்பரியமாவது:—சித்தானது முக்குணத்தோடு கூடிய அந்தக்கரண அறிவு; அந்த சித்தறிவானது சரீரபாவனை யாதலால், அந்த சித்தறிவுக்கு அந்தமான வஸ்து எதுவோ அது பரமாத்மா; அதுதான் சித்தாந்தமென்றறிக.

ஓ மனமே கேள்:— இப்படிக்கொத்த வேதாந்தமோ சித்தாந்தமோ சிலாக்கியமென்று நீ கேட்ட கேள்விக்கு உண்மை சொல்லுகிறேன் கேள்— வேதாந்த மென்பதின் பொருள் இந்திரியங்கள் பத்தும், அந்தக் கரணம் நான்கும், குணம் மூன்றும், அடக்கி, மும்மலங்களும் போக்கி, ஸ்ரீ சற் குருவின் திருவருள்பெற்றபின் வேதாந்தமாமென்றும்; சித்தாந்தமானதின் பொருள் முன் கூறினபடியுள்ள இந்திரியங்கள் பத்தும் அந்தக்கரணம் நான்கும் குணமூன்றும அடக்கும்பொருட்டு சன்மார்க்கமாய் சர்வமும் கடவுளின் சுரூபமாய்ப் பார்த்து, உபரித்தால் சித்தடங்கி சிவாநந்தமாய் விளங்கும், அதுதான் சித்தாந்தமென்று அறிக. மாயை முதல் பூம்வரையிலுள்ள சர்வ வஸ்துக்களும் கானல் ஜலம் போல் பொய்யாமென்று வேதாந்தமும், பூமிமுதல்

நாதம்வரையிலுள்ள சர்வ வஸ்துக்களும் மண்ணும் குடமும் போலேயும், நூலும் படவும் போலும் கடவுளின் சுரூபமாமென்று சித்தாந்தமும் கூறினது சரி. இந்தப்படி வேதாந்த சித்தாந்தங்களிரண்டும். இதினுடைய தார்ப்பிரியம் பிடிவாதம் கூடாமல் ஸ்ரீ சற்குருவின் திருவருளால் அறியுமானுல் ஏகமாயும் சமரசமாயும் சச்சிதாநந்த சுரூபமாயும் விளங்குமென்பதற்குச் சந்தேகம் வேண்டாம். இன்னும் முக்காரணங்களும் பொய்யாமென்னும் வேதாந்த மதம். முக்காரணங்களும் அடங்கும் உபாயம் கூறியது சித்தாநதமதம். வேதாந்திகளுக்கும் சித்தாந்திகளுக்கும் சராசரபிரபஞ்ச வஸ்துக்களுக்கும் ஆத்மாவானதும் ஆசைக்கு அந்தமானதும் பரமாத்மா ஒன்றுதான். அதானது வேதாந்தமுமல்ல சித்தாந்தமுமல்ல; அந்தமும், அல்ல் ஆதியும் அல்ல; ஆதிமத்தியாந்த மற்றதாயும், பரிபூரணுநந்த பரஞ்ஜோதியாய் விளங்குவதாம் பரமாத்மவஸ்து வென்றறிக.

ஓ மனமே கேள்:—பூர்வ கர்மபுண்ணியத்தினுல் வந்ததாம் இந்த மானிடசரீரம். சரீரம் எடுத்ததின் பலனுவது மோக்ஷம், பெந்துவானது குரு, லாபமானது சந்தோஷம், சத்துருவானது ராகத்துவே

ஷாதி சம்சாரக் கூட்டம்; இதின் பலனானது நரகம், அகங்காரமாம். அஞ்ஞானத்தினால் தோற்றுவதாம் நரக சொர்காதிகள்.

ஓ மனமேகேள்:—ஆத்மாவின் அம்சமான மாயா குணங்களால் தோற்றுவதாம் பஞ்ச பூதம். பஞ்ச பூதமாம் மூவுலகம் ஆதலால் பஞ்ச பூதத்தைத் தவிர நான் என்கிற ஒரு வஸ்துவுமில்லை, இல்லை என்பது நிச்சயம்; இதை சத்தியமாய் நம்பினால் அகங்காரமான அஞ்ஞானம் அடியோடே நசிக்கும்; அகங்காரமான அஞ்ஞானம் நாசமானால் நாம் பிறந்ததுமில்லை பிறவாமல் போனால் இறப்பதுமில்லை. ஆதலால் அகங்காரத்தை பஞ்ச பூதத்திலடக்கி பஞ்ச பூதத்தை மாயா குணத்திலடக்கி மாயா குணமானதை பராசக்தியிலடக்கி பராசக்தியை பரமாத்மாவிலடக்கி சமரசமாய்ப் பார்க்கும்போது ஜீவன் நிராதாரியாய் பரமாத்மாவோடு சேரும். அப்போது பரமாத்மாவைத் தவிர அணுவளவும் வேறே யில்லை என்பது சத்தியம். அது அப்படி யிருக்க பொய்யாயுள்ள நான் என்கிற அகங்காரம் ஒன்றுதான் பாபத்துக்கு காரணம். தன்னைத்தான் அறியாமலிருந்தது அஞ்ஞானம்; ஆசை தான் எமபாசம், புண்ணிய பாபத்

தினல் நரக சொர்க்கம். அன்பர்களை அன்புற்று கண்டது தான் கைலாச வைகுண்டமென்றறிக. அனுசையாய் அருள்பெற்று ஆத்ம சுகத்தை அடைவதே மோக்ஷம்.

ஓ மனமே கேள்:— ஆத்மசுகத்தை அடையும் பொருட்டு சற்குருவினிடத்தில் அனன்னியமாயும் நிற்சலமாயும் ஏகாந்தமாயுமுள்ள பக்தி ஒன்று தான் ஞான விக்ஞான மோக்ஷத்திற்கும் முக்கிய காரணமென்றும் இதைத் தவிர எக்கியம் தானம் தபசு முதலான கர்மங்களினாலும் அநேக ஞான நூல்களைப் பார்த்தாலும் ஞான விக்ஞான மோக்ஷம் வராதென்றும் எல்லா சாஸ்திரங்களின் தார்ப்பரியம்.

மனம்:—ஓ சுவாமி! முன் கூறினபடியுள்ள குருபக்தி அடையும் பொருட்டு முக்கிய சாதனம் ஏதென்று கேட்க அறிவு கூறியது.

ஓ மனமே கேள்:—சற்குரு பக்திக்கு முக்கிய சாதனம் நவவிதம். அதில் முதலாவது, துற்சங்கம் விட்டு சற்சங்கம் செய்யவும், இரண்டாவது நல்ல சற்கதைகளைக் கேழ்க்கவும், மூன்றுவது ருசசமாயும் தாமசமாயும் உள்ள குண கர்மங்களை தூரத்

தள்ளி சாத்வீக குணமான சற்கருமங்களை நிஷ்காம மாக ஆசரிக்கவும்; நான்காவது குருபகவானுடைய மகிமையை சிந்திக்கவும், ஐந்தாவது ஸ்ரீ சற்குருவின் திருவடியை இடைவிடாது தியானிக்கவும், ஆருவது இயமநியமாதி சாதனங்களைக் கொண்டு சற்குருவின் திருவடியில் ஆருதிக்கவும், ஏழாவது ஸ்ரீசர்க்குருவின் திருவருள் மந்திரத்தை உபாசிக்கவும், எட்டாவது ஸ்ரீ சர்க்குருவை ஒரு மனிதனுக எண்ணுமல் பர மாத்மா என்றும் அதுவே சர்வாத்மா என்னும் பரம விசுவாசமும், ஒன்பதாவது, இப்படி எல்லாம் அப்பி யாசமாய் தன்னுடைய ஆத்மதத்துவத்தை விசாரணை செய்யவும். இந்தப்படி அப்பியாசம் செய்து பழகி வருவதானுல் சித்தசுத்தி வரும். சித்தசுத்தி வந்தால் சர்க்குரு தெரிசனமாகும். இப்படிப்பட்ட ஸ்ரீ சர்க் குரு பக்த்திக்கு அதிகாரிகள் யார் என்ருல், கரி, மிருக, பசு, பக்ஷிகளானுலும் மூடர்களாயுள்ள ஸ்த்ரீ சூத்திராதிகளானுலும் மகாத்மாக்களின் திருவடி சேவை செய்யும்பொருட்டு எல்லோருக்கும் அதி காரமுண்டு, இதற்கு பக்தி ஒன்றே முக்கியம். இந்தப் படி பக்தி செய்து பழகி வருவதானுல் பக்தி முற்றும்.

அது முற்றும்போது ஏகாந்தமாய் தன் இருதயம் தெளிவடையும். இருதயத்தின்கண் தெளிவானால் நிர்ச்சலமாய் சர்வாத்மாவானது பரமாத்மனென்கிற விஸ்வாசம் திடப்படும். இப்படியே பரமாத்மாவே சர்வாத்மா என்றும் சர்வாத்மாவே பரமாத்மா என்றும் சமரசமாய் திடநிச்சயமாகும். திடநிச்சயமானால் தன் ஆத்ம தத்துவம் தானே விளங்கும். தன் ஆத்ம தத்துவத்தை அறிந்தவர்கள் நீசர் குலத்தில் பிறந்தவர்களானாலும் அவர்கள் பரபிர்மமாம் என்பதற்கு சந்தேகமில்லை. மனம் பலவிதம் ஓடுவது சுபாவீகம். ஆனாலும் பல குருவை நம்புவதும் பலவிதம் அலைவதும் வியபசாரமாம். ஆதலால் மனம் ஒரு சற்குருவை நம்பி சுத்தமாய் உபாசித்தால் உள்ளம் துறவடையும்; உள்ளம் துறவடைந்தால் இருவாசனையும் நசிக்கும். இருவாசனையும் அற்றால் திவ்யமங்கள சுயம்பிரகாசமாய் பிர்மாநந்த சுரூபம் விளங்கும். ஆதலால் மனதை ஆகும்மட்டும் பரிசுத்தமாக்கி பிர்மாநந்த சுரூபத்தை தியானம் செய்தால் மனம் பரிசுத்தமாய் பிர்மானந்த சுரூபம் அடையும்; மனம் எந்த ரூபத்தை தியானிக்கிறதோ

அந்த ரூபம் அடையும் சந்தேகம் வேண்டாம். ஆத லால் கர்ப்பக விருக்ஷம் போல் கடவுள் ஒருவரே சர் வமும் சர்வத்துக்கும் அந்தரியாமியாய் யிருந்தும் அவாளவாள் கோரினபடி கேட்டவரம் கொடுப்பார். அந்தக்கரணமிருந்த மட்டும் சரீருதி வஸ்துக்கள் சத்தியமாய்த் தோற்றுவது சுபாவீகம். அந்தக்கர ணம் பரிசுத்தமானால் ஒன்றுமே கிடையாது. மாயா பிரகிருதியின் குண விருத்தியால், உண்மையாக தோற்றுவதாம் உலகம் பலவிதமாதலால், அதைப் பார்த்து ஒருவரும் பழிக்கலாகாது. அப்படியே பழிப் பதானல் அவர்கள் நரகத்துக்காளாவார்.

மனம்:—ஓ சுவாமி! இப்படி ஏகமாயிருந்தபரமாத் மாவிருந்தும் உலகம் பலவிதமாய் வந்த காரணம் என்னவென்று கேட்க அறிவு கூறியது.

ஓ மனமே கேள்:—மாயா மயமான உலகவாசனை யானது அநேக அநேக விதமாய் அளவிறந்த கோடி யாய் அனுதியாயுள்ளதால் அது ஒருவருக்கும் தெரி யாது. அனலும் பூர்வ ஜென்மத்தில் செய்த கர்ம பலன் இச்சென்மத்தின் அனுபோகம்; இச்சென்மத்தில் செய்த கர்ம பலன்கள் அடுத்த ஜென்மத்தில் கட்டா

யம் வரப்போகுதென்று அறியலாம். ஆதலால் கடவுள் எல்லோருக்கும் பொதுவாய் ஒருவரே கேட்டவரம் கொடுப்பவராய் சர்வாந்திரியாமியாய் சர்வசாக்ஷியாயிருப்பவராதலால் கடவுளுக்கு ஓர் பிராணியிடத்திலும் பக்ஷ பேதமில்லை என்பது நிச்சயம். இதை முமுக்ஷுக்களுக்கு பெந்தம் விட்டு மோக்ஷம் அடையும் பொருட்டு சொன்னதல்லாமல் வேறில்லை; குருவானவர் யாரென்றால் நிராசையாயிருந்த மகாத்மாவாம். சிஷ்யன் யாரென்றால் நிஷ்காமியாயும் முமுக்ஷுவாயுமுள்ளவந்தான் அதிகாரி.

ஓ மனமே கேள்:— அதிக தாகமுடையவர்கள் கல்ல நதிஜலம் சமீபத்தில் கிடைத்தால் அதை விட்டு சமுத்திர ஜலத்தை தேடிப்போனது போல, மோக்ஷமடையும் பொருட்டு அபேக்ஷை யுடையவர்கள் குருவாக்கிய பிரமாணங்களை தள்ளிவிட்டு முன் காலங்களில் அன்பர்களான மகத்துக்களை யடுத்த சிஷ்யர்களுக்கு அதிகாரத்துக்கு தகுந்த படி உபதேசிக்கப்பட்ட ஞான நூல்களைப் பார்த்தும் ஞானம் வராமல் அலைவது மகாகஷ்டம்; குருவாக்கியமானது ராகத்துவேஷாதிக் கிடமாயுள்ள சம்சாரமான இருளை

நீக்கி சுயம்பிரகாசமாகும் பொருட்டு அநுக்கிரகம் செய்வதாம். இது தீப மார்க்கமாகுமென்றும் இதைத் தவிர மற்ற உபாய மெல்லாம் தூம மார்க்க மாகு மென்றறிக.

ஓ மனமே கேள்:—அநேக வழி யிருந்த ஓரிடத்தில் போகவேண்டிய ஜனங்கள் வந்தால் அவரவர்கள் போகவேண்டிய வழிகாட்டும் கைகாட்டி மரம் போல், அதிகாரத்துக்கு தகுந்தபடி குரு சொன்னபடி நடப்பது மெத்தவும் நன்றுநன்று. அப்படி நிதானமாய் ஆசாரியன் கைகாட்டிய வழி போனால் மெய்யறிவு விளங்கி பேரின்பமான மோக்ஷவீடு அடைந்து பிர்மாநந்தமாய் இருக்கலாமென்பது சத்தியம், சந்தேகம் வேண்டாம். பலமுள்ள விருக்ஷத்தை காத்திருந்தவனுக்கு அதின் பலம் கிடைக்கு மென்பதற்கு சந்தேகமுண்டா? அதுபோல அநுபூதிமானா யிருந்த ஸ்ரீ குருவை நம்பியடுத்து பாதுகாத்து காவல் காத்தால் ஞானபலன் கிடைக்கும். இதைக் கேட்ட மனம் ஓ சுவாமி! தேகாதி பிரபஞ்சங்கள் சர்வமும் பொய்யாமென்றெண்ணுவோர்களுக்கு மோக்ஷமென்பதும் பொய்யாகுமே. தேகாதி பிரபஞ்சங்கள் சர்வமும்

மெய்யா மென்றெண்ணுவோர்களுக்கும் அப்படியே; ஆதலால் இருதலை கொள்ளியாயிருக்கிறது. இதற்கு என்ன செய்வோம் என்று கேழ்க அறிவு கூறியது.

ஓ மனமே கேள்:—இவ்வுலகத்தின்கண் நான் நீ என இருக்க இந்த உலகம் பொய்யாமென்றும் எப்படி சொல்லக்கூடும்.

ஓ மனமே கேள்:—உலகம் பொய்யானுல் குருவேது?சிஷ்யனேது?நானேது?நீயேது?சுருதி ஸ்மிருதி வேத சாஸ்திர புராண இதிகாசங்களும் உபநிஷத்தாதி மகாவாக்கிய பிரமாணங்களும் தேவாதி தேவர்களும் சாதிக்களும் பொய்யாகுமே? உலகம் மெய்யாமென் றெண்ணுமானுல், தேகமே சத்தியம் போகமே நித்தியம்,இந்தப்படி நினைந்தவர்களுக்கு மோக்ஷமில்லை நிச்சயம் நரகமே பலன்; ஆதலால் இதைத் தவிர மெய் பொய் இரண்டும் அற்ற இடத்தில் அருள் பெருகி அபேதமாய் விளங்கும். அதானது அமிர்த பரிபூரண சுகானந்த வாரியாய் ஏகமாய் விளங்கும். இதைத்தவிர முன் கூறினபடி உலகம்பொய்யாமென்றால் ஜீவர்கள் ஏது? ஜீவர்கள் இல்லாவிட்டால் நீயேது நானேது? நானும் நீயும் ஜீவர்களும் இல்லாவிட்டால் இறப்பு பிறப்பு ஏது? இறப்பு பிறப்பு இல்லா

விட்டால் பெந்த மோக்ஷம் இரண்டும் பொய்யாம் என்பதற்கு சந்தேகம் உண்டா? உலகத்தை மெய் யாக நம்புவோர்களுக்கு மோக்ஷமும் உண்டு சந்தே கம் வேண்டாம். எப்படி உலகம் மெய்யாகுமென் ருல்:-கடலில் இருந்தும் தோற்றப்பட்ட அலையும் நுரையும் போல் பரமாத்மாவின் அம்சமான மாயை யால் தோற்றுவதாம் உலகம்; ஆதலால் பரமாத் மாவைத்தவிர அணுவளவும் வேறே இல்லை என்றும் சுருதி கீதை முதலான சாஸ்திரங்களிலும் மகத்துக் களும் கூறியது சத்தியமாய் நம்பவேணும்; அப் படியே நம்புமானுல் சித்தம் பரிசுத்தமாய் ஸ்ரீ சர்க் குருவின் திருவருள் பெறலாம். திருவருள் பெற்ருல் மெய் பொய் யிரண்டும் பரமாத்மாவில் அடங்கியிருக் கும், அப்படி மெய் பொய் யிரண்டும் பரமாத்மாவில் அடக்கமானுல் பிர்மாநந்த பதமடையலாம். இதற்கு சந்தேகமில்லை என்பது சத்தியம். இதைத்தவிர உலகம் பொய்என்று எண்ணுவோர்கள் நரகத்துக்கு ஆளாக வேணும், ஆனுலும் இருளில் பழுதையைக் கண்டு பாம்பாக நினைந்து பயந்தது பொய் பொய் பொய்; பாம்பல்ல இது பழுதையாமென்று உண்மை

யாக கண்டறிவதே மெய் மெய் மெய் எனறும் மகத்துக்கள் சம்மதம்.

ஓ மனமே கேள், உலகம் மெய்பொய் என்று இரண்டு விதமாக தோற்றும். விபரீத பிருந்தி நாசமடையும் பொருட்டு பரமரகசியமான உபாயம் சொல்லுகிறேன்; காஞ்ச கட்டையை நெரிப்பில் வைத்தால் அதிலிருந்து கிளம்பிய புகையைப்போல் சத்தியமாய் தோற்றுவதாம் உலகம். சர்வ வியாபகமாயும் பரிபூரணமாயுள்ள பரமாத்மாவின் சிற்சத்தியின் பிரகாசத்தினுல் தோற்றுவதாம் இந்த உலகம். ஆதலால் அது பரமாத்மாவில் அடங்கும்போது உலகம் அணுவளவு ஆனாலும் கிடையாது; சரீராதி பிரபஞ்ச வஸ்துக்கள் அனைத்தும் முன் கூறிய விறகு கட்டையும் அக்கினியும் சம்மந்தமில்லாமல் இருந்த மட்டும அந்த கட்டையானது அக்கினிக்கு வேருய் தோற்றுவது போல ஆத்மாவினிடத்தில் ஞானம் வருமல் இருந்த மட்டும் அந்த ஆத்மாவைத் தவிர தேகாதி பிரபஞ்ச வஸ்துகள் வேருயும் சத்தியமாயும் தோற்றுவது சுபாவீகம், இதற்கு சந்தேகம் தீரும் பொருட்டு ஸ்ரீ சற்குருவின் திருவருளே சத்திய பிரமாணம் வேறில்லை.

ஓ மனமே கேள். இந்தப்படி ஸ்ரீசற்குருவை அன்புற்று சேவித்து உணராமலும் திருவருள் பெறுமலும் பிர்மாநந்தத்தை அநுபவியாமலும் சம்சார சாகரத்தின் நடுவில் விழுந்தலையும் மனிதர்கள் தேகாதி பிரபஞ்சமெல்லாம் பொய் என்றால் அது நாஸ்தீக மதமாம்; இதைத்தவிர தேகாதி பிரபஞ்ச மெல்லாம் மெய்யாமென் றெண்ணுவோமானால் அது அஞ்ஞான அந்தகாரமாம்; அது பிருகிர்தமான பரமாத்துவமென்றறிக. இந்தப்படி மெய் பொய் இரண்டும் தோற்றுவதற்கு காரணம் மாயை; மாயையானது இரண்டு விதம்; அதானது சுத்தமாயை என்றும் அசுத்தமாயை என்றும் அறிக. இதுகளில் அசுத்த மாயையானது மனம். மனம் பரிசுத்தமானால் அது சுத்தமாயையாம் என்றறிக. இது யிரண்டிற்கும் காரணம் பரிசுத்தமான மூல மாயை ஒன்று தான்; அதானது ஞான சிற்சத்தியாம் என்றறிக. ஆதலால் நாநுவிபகாரங்களெல்லாம் மனோலய பரியந்தமிருக்கும் மனோலயமானால் மூலமாயையும் பரமாத்மாவிலடங்கி இருக்கும், மனோலயமடைந்தால் எல்லாம் பரமாநந்த பரிபூரண பரஞ்ஜோதியாய் விளங்கும் சந்தேகமில்லை. மனம் ஓ சுவாமி பாலும் நீரும் கூடி இரண்டாக்கலங்

தது போல என் உள்ளம் ஞானமும் அஞ்ஞானமும் கூடி இரண்டாக கலந்திருப்பது சகஜம். இதுகளில் அஞ்ஞானம் நீக்கி ஞானம் அடைவதை கிர்தார்த்த மென்றும் புருஷார்த்தமென்றும் அரிந்தேன். முதலாவது அஞ்ஞானம் நீக்கி ஞானமடைய வேணுமா, அதல்ல ஞானமடைந்த பின் அஞ்ஞானம் போக்க வேணுமாவென்று கேட்க அறிவு கூரியது.

ஓ மனமே கேள். இராக்காலத்தில் இருள் நீக்கி சுரூப வஸ்துக்களை பார்க்கும் பொருட்டு ஓர் தீபம் வேண்டுவதவசியம் அப்படியே தீபம் கைவசமிருந் தாலும் அது நின்று போனல் மருபடியும் அத்தீப மேற்றும் பொருட்டு வேறு தீபம் வேண்டியதவசியம் தீபமில்லாவிட்டால் நெருப்பிருந்தாலும் போதும் நெருப்புமில்லா விட்டால் சக்கிக் கல்லோ அல்லது தீ பொட்டியோ இருந்தாலும் போதும், அதுகள் இருக்கிறதானுலும் இருள் காலமானதால் அதை பார்த்து எடுக்கும்பொருட்டு ஓர் தீபம் வேண்டுவ வசியம். ஆகையால் இது இருதலை கொள்ளியாய் இருக்க எப்படி முடியுமோ ஆனுலும் முன் கூரிய வாறு முதலாவது அஞ்ஞானம் நசியாமல் ஞானம் வாருதென்றும் அதர்க்கு ஞானம் வருமல் அஞ்ஞா

னம் கசியாதென்றும் இருபக்ஷமாய் சில வித்துவான்கள் பிடிவாதம் செய்வார்கள், அது விருதாவாம் ஆனலும் முதலாவது அஞ்ஞானம் போக்கடித்தால்: ஞானம் தானே வரும். அஞ்ஞானமென்பது தாமசகுண காரியமான இருள். இருள் நீங்கும் பொருட்டு, முதலாவது குருவருள் விஞ்ஞான மென்கிற தீபமேற்றினல் நீங்கும், அப்படியே இருள் நீங்கி விட்டால், மும்மலங்களும் அறும், மும்மலங்களும் அற்ருல் அருள் ஞானம் சுயம் பிரகாசமாய் விளங்கும். சந்தேகம் வேண்டாம், இந்தப்படி விஞ்ஞானங் கொண்டு அஞ்ஞானம் போக்கடித்தால் மனம் ஞான சுரூபமடையும். இதைத் தவிர ஞானம் பூரணமாக்கி அஞ்ஞானம் போக்கலாம் என்ருல் அந்த பிடிவாதம் மகா துக்கம். ஏனென்ருல் அஞ்ஞானம் நிரைந்திருக்கும் இருளில் அணுவளவும் ஞானம் வந்தடைவதற்கு இடமில்லை என்பது நிச்சயம். அது போக ஞானம் பரிபூரணமாய் இருக்குமிடத்தில் அஞ்ஞானம் அணுவளவுமிருது என்பது நிச்சயம்.

ஓ மனமே கேள்:— ஞானம் அடையும் பொருட்டு முதலாவது சன்மார்க்கமாய் விஞ்ஞானத்தை

அடைந்து அஞ்ஞானம் நீக்கி ஞானம் அடைவது சகச போதாநந்த சமுத்திரம் அதற்கு நான்கு சாதனங்களும் கற்று மும்மலங்களும் அற்று அருள் பெற்ருல் ஞானம் கரதலா அமலமபோல் சுலபமாய் கைவசமாகுமென்பதற்கு சந்தேகம் வேண்டாம்.

மனம்:— ஓ சுவாமி! எதார்த்த ஞானத்தை யோசிக்குமளவில் ஆத்மா ஏகமாய் எங்கும் பரிபூரணமாய் நிறைந்திருக்கிறதென்றும், அது அப்படியிருக்க; அஞ்ஞானம் வந்தவாறு எங்கனமென்று கேட்க அறிவு கூறியது.

ஓ மனமே கேள்:— எதார்த்தமாயுள்ள பூரணக்கியானிகளிடத்தில் அஞ்ஞானம் அணுவளவும் இராதென்பது நிஜம். அப்படி அஞ்ஞானிகளிடத்தில் ஞானமும் விளங்காது. ஏனென்ருல் ஞானத்தை மறந்தது தான் அஞ்ஞானமென்றும் அஞ்ஞானத்தை மறந்தது தான் ஞானமென்றும் அறிக. அஞ்ஞானி என்பவனுக்கு அடுத்த பெந்துவாயும் சகாயிகளாயும் இருவர்கள் பிரியாமலிருக்கிறது. அவர் யாரென்ருல் சந்தேகம், விபரீதம், இந்தப்படி அஞ்ஞானம் விபரீதம் சந்தேகம் இவர் மூவரும் ஒருமையாய்க்கூடி

அஞதியாய் ஆத்ம துரோகிகளாயும் ஆத்ம சூன்யரா யும் கொடும் பாபிகளாயும் நரகத்திற்கே ஆளாக்குவர் களாயுமிருக்கிருர்கள். இதுகளில் அஞ்ஞானமென்ப வன் யாரென்ருல் தாமசகுணமான இருள். விபரீத மானது ருசசகுண ரூபமானது பாம்பு; சந்தேகமா னது பழுதை; அதானது இராக்காலத்தில் கயிர் கண் டதைப்பார்த்து, பாம்பாக நினைந்து பயந்தது விபரீ தம்; ஆதலால் இப்படியுள்ள தாமச ருசசமான கோர மூட துஷ்டர்களை தூர ஓட்டி ஸ்ரீ சற்குருவின் திரு வருள் பிரகாசத்தினல் கவனித்து பார்க்குமளவில் பாம்பு அல்ல; இது பழுதையாமென்று அறியும்போது விபரீதம் நசிக்கும்; விபரீதம் நாசமானல் முன்கூறின படி சந்தேகமும் அஞ்ஞானமும் தானே நசிக்கும். இப்படி அறிவதே பூரணக்கியானமென்றும் மகான்கள் சம்மதமாளுலும் பூரண ஞானத்துக்குள்ளே அஞ் ஞானம் தோற்றுவதெப்படி எனில் கடவுள் ஒருவ ருக்கே தெரியக்கூடும் அதைத்தவிர வேறு ஒருவருக் கும் அரியக்கூடியதும் சொல்லத்தகுந்ததும் அல்ல என்பது நிச்சயம், ஆனுலும் கேவலம் நிர்ம்மலமாயும் பரிபூரணமாயுமுள்ள ஆகாசத்தின்கண் அநேக அநேக வித பேதமான சித்திரங்களெல்லாம் தோற்றி அழி

வது போல பரமாத்மாவானது ஏகமாய் நிர்ம்மலமாய் பரிபூரணமாய் சர்வ வஸ்துக்களுக்கும் இடம் கொடுத்து ஆவதும் அழிவது எல்லாம் தானுய் தனக்கன்னியமில்லாமல் பற்றற்று நிர்ச்சங்கனுய் நிர்விகாரியாய் பிர்ம்மாநந்தமாய் இருக்கிறது. இதற்கு ஸ்ரீ சற்குருவின் திருவருளே பிரமாணம்.

ஓ மனமே கேள்:—இந்த உலகத்தின் கண் நரர்களின் க்ஷேமத்தின் பொருட்டு சர்வ பிராணிகளிடத்திலுள்ள ஜீவகாருண்ணியமே எல்லாவற்றிலும் சிறந்ததென்று நீதி சாஸ்திரங்களிலும் மகத்துக்களும் கூறி இருக்கிறது சத்தியமாம். ஜீவகாருண்யத்தினுல் அடையும் பயனுவது பொருமை பொருமைக்கு மேல் யாதொரு தர்மமும் கிடையாது ஆதலால் ஜீவகாருண்ணியமும் பொருமையுமுடைய மகான்களுக்கு மூன்றுலகத்தையும் மூலமாயையுந் தாண்டி ஜீவன் முத்தி அடையலாம் என்பதற்கு சந்தேகமில்லை. என்பது பெரியோர்கள் சம்மதம். ஜீவகாருண்ணியமில்லாதவர்கள் காசிக்குப் போனுலும் கர்மம் செய்தாலும் பலன் விபரீதமாய் வந்து விடும். ஜீவகாருண்யமுடையவர்கள் எங்கே யிருந்தாலும்

எத்தொழிலைச் செய்தாலும் பிர்ம்மானந்தமாய் இருப்பார்கள். ஆதலால் ஜீவகாருண்ணியமே குருபக்தி ஜீவகாருண்யமே குருவருள். ஜீவகாருண்யமே ஜீவ தெரிசனம், ஜீவ தெரிசனமே பரதெரிசனம், பர தெரிசனமே, சிவ தெரிசனம், சிவ தெரிசனமே, பிர்ம்மாநந்தமாம், பிர்ம்மாநந்தமாவது நித்தியானந்தம் நித்தியானந்தமாவது சத்தியம். பரமசிவம் ஒருவரே அகண்ட பரிபூரண சச்சிதாநந்த சுரூபமாயும் சர்வத்திற்கும் அந்தரியாமியாயும், சர்வ சாக்ஷியாயும் இருப்பது மெய்யானல் அதைத்தவிர ஜீவர்கள் ஏது.

மனம்:— ஓ சுவாமி! அது அப்படியிருக்க, ஜீவர்கள் செய்யும் கர்மமாவது. ஏது அப்படியே ஜீவர்களுக்கு கர்த்தத்துவமில்லாமல் போனுல் கர்ம பெந்தமாவதேது பெந்தமில்லாவிட்டால் சுகதுக்க மோக்ஷங்கள் ஏர்ப்படுத்த காரண மென்னவென்று கேட்க. அறிவு கூறியது.

ஓ மனமே கேள்:— சர்வத்திற்குங் காரணமாயும் ஏகாம்பர நாயகன் ஒருவரே, ஆதலால் அவரே சர்வத்திற்கும் அந்திரியாமியாய் இருந்தலும் அவர் தான் அப்படியே அந்திரியாமியாய் இருந்தும அஞ்ஞானமான

மாயா மோகத்தினல் நான் செய்தேனென்கிற கர்த் தத்துவத்தினுலும் ஜீவன் பெந்தனய் தோற்றுவது சுபாவீகம். அங்கனம் எப்படி எனில் பரமாத்மா ஒருவரே சர்வத்திற்கும் அந்தரியாமியாய் இருந்தும் வாக்கு மணக்காயங்களினல் செய்யப்பட்ட திரிவித கர்மங்களுக்கும் காரணம் அவர் ஒருவரே ஆதலால் அவர் செயலாக எண்ணுமல் நான் செய்தேன் என் கிற கர்த்தத்துவ மிருந்தமட்டும் ஜீவர்கள் அந்தந்த கர்ம பலன்களை யநுபவித்து தீரவேண்டுமென்பது உண்மை. அதைத்தவிர கர்மபலத்திலும போகத்தி லுள்ள ஆசையை விட்டு வைருக்கியத்துடன் நிஷ்க் காமமாய் நான் செய்தேன் என்கிற அக மயதையும் அகங்காரமும் விட்டு கர்மம் செய்தால் கர்ம பெந்தம் கிடையாதென்பது நிச்சயம, எல்லாம் சிவமயமாய் இருக்க அதைத்தவிர நான் செய்தேனென்கிற அகங் காரம் அணுவளவுமில்லை என்பது நிச்சயம், அதி னல் பெந்தம் கிடையாதென்பது தாற்பிரியம்.

ஓ மனமே கேள்:— பரமாத்மாவின் அம்சமான மாயையால் தோற்றப்பட்ட வாக்கு மனக்காய மூன் றும் பரமாத்மாவில் அடக்கமானல் முக்குணங்களும் முத்தொழிலும் மும்மலங்களு மற்று மூலமாயை

தாண்டி ஸ்ரீ சற்குருவின் திருவருள் பெற்று பிர்ம்மா னந்த பதமடையலாம் சந்தேகம் வேண்டாம் ஸ்ரீசற் குரு புத்தி விஷேமானுல் ஆத்ம புத்தி திரமாகும் ஆத்ம புத்தி திரமானுல் அனுத்ம புத்தி நசிக்கும், அனுத்ம புத்தி நாசமானுல் குருகாருண்ணியம் பூர ணாநந்த சமுத்திரமாம். இதைக்கேட்ட மனம். அனலை அடைந்த மெழுகுபோல் மன முருகி அன்பாக ஆநந்த பாஷ்பம் பெருகி புளகாங்கிதத்துடன் அஞ் சலியஸ்தனுய் நின்று கேட்கிறேன். ஓ சுவாமி தேவரீர் இதுவரையிலும் அருளிச்செய்த மகாவாக் கிய உபதேசங்களைக்கேட்டு அடியேனுடைய சந்தே கங்களெல்லாம் தீர்ந்து அறிவுதான் பிர்ம்ம மென்றும் பரம விஸ்வாசமாய் யறிந்தேன், ஆனுலும் என்னு டைய அறிவுக்குள் சுகதுக்க மிரண்டும் சகசமா யிருக் கிறது இதை நீக்கு முபாயம் எப்படி என்று கேட்க அறிவு கூறியது.

ஓ மனமே கேள்:—உனக்கு மாத்திரம் ஓர் அறிவு வேரில்லை. அதானது சருசாத்துக்கும் அறிவாயும் அந்தரியாமியாயும் சர்வ சாக்ஷியாயும் பொதுவாயும் ஏகமாயும் உள்ளதாம். அந்த அறிவுக்கு சுகதுக்க

மிரண்டும் சுபாவீகமாக தோற்றினாலும் உண்மை யல்ல, அங்ஙனம் வந்தவாறு, ஆகந்துகம் என்பது மத்தியில் வந்தது அங்ஙனம் வரக்காரணம் அஞ்ஞானம், அதாவது இரண்டு விதம் அஞ்ஞான ஆபரண மென்றும், அபான ஆபரண மென்றறிக. இந்தப்படி இன்னும் அறிவை மறைக்கப்பட்ட வஸ்துக்கள் ஆணவம், மாயை கர்மம் இம் மூன்று மாமென்றறிக, இது களில் ஆணவமென்பது முன் கூறிய அஞ்ஞானம் அஞ்ஞானமாவது இரண்டுவிதம் அதாவது இந்திரி யாக்ஞானமென்றும் சுரூபாக்ஞான மென்றும் அறிக. இன்னும் மாயையானது மூன்று விதம் அதானது சாப்தீக குணமாயை என்றும், ருசதகுண மாயை என்றும் தாமசகுண மாமை என்று மரிக. இனி காமமானது மூன்று விதம், அதானது ஆகாமியம் சஞ்சிதம் பிரூரத்துவம் இம்மும்மலங்களு மடங்கி விட்டால் அறிவு விளங்கி சுகதுக்க விகர்ப்பங்கள் நீங்கிவிடும் நீங்கி விட்டால் அறிவு நிர்விகாரியா மென் றறியலாம். இதைக்கேட்ட.

மனம்:-ஓ சுவாமி! இந்த மும்மலங்களும் போக்கி அருள்பெரும் உபாயம் எப்படி என்று கேட்க அறிவு கூறியது.

ஓ மனமே கேள்:— மும்மலங்களும் போக்க உபாயம் எப்படி எனில் முதலாவது கர்ம்மத்தை விட வேண்டும், கர்மம் விடும் உபாயம் எப்படி என்றால் கோரமூட விர்த்திகளான துஷகர்மங்களை தூரத் தள்ளி சாப்தீகமான நல்ல சர்க்கர்மங்களை நிஷ்காம மாகச் செய்து பழகிவருவதானால் ஆகாமியம் சஞ்சித மிரண்டும் அடியோடு நசிக்கும். ஆகாமியம் சஞ்சித நாசமானால் பின்பிராரத்துவம் அனுபவித்து தீரும் இந்தப்படி கர்ம மூன்றும் நாசமடைந்தால் தாமச குணமாயையும் ராசசகுண மாயையும் அடியோடே நசிக்கும் நல்ல சாப்தீக குணமாயை மேவிடும் சாப் தீக குணமாயை மேவிட்டு சாந்தமானால் அந்தக்கர ணம் பரிசுத்தமாகும் அந்தக்கரணம் பரிசுத்தமானால் சாப்தீக குணமாயையும், இந்திரியாக்ஞானமும் சுரூ பாக்ஞானமும் நசிக்கும். இந்திரியாக்ஞானமாவது, ஞானேந்திரியமைந்து கர்மேந்திரியமைந்து, இது களில் அந்தக்கறணத்தையும் ஆத்மாவையும் மறைப் பதாம் சுரூபக்ஞான மெம்பதற்கு தார்ப்பரியம் மனம், புத்தி, சித்தம், அகங்காரம், இதுகள் நான்கும் கூடி யது அந்தக்கரணம், அந்தக்காணத்தினால், ஆத்மா

வினைமறைக்கப்பட்டதாம், சுரூபாக்ஞான மென்றறிக இந்தப்படியுள்ள மும்மலங்களும் போக்கி அருள் பெற்று பிர்ம்மானந்த பதமடையும் பொருட்டு முக் கிய சாதனம் முன் கூறினபடியுள்ள ஸ்ரீ சர்க்குரு பக்தி ஒன்றேயாம். வேறில்லை.

ஓ மனமே இன்னும் கேள்:—மும்மலங்களும் அடக்கும் உபாயம் ஸ்ரீ சர்க்குருவின் திருவருள் பஞ்சாக்ஷர சுரூபத்தை அன்புற்கு பார்த்தால் மும் மலங்களும் அதில் அடங்கி இருக்கும். பஞ்சாக்ஷரத் தின் சுரூபமாவது பூமி முதல் ஆகாசம் வரையுமாம் அதுவும் அல்ல, பூமி முதல் நாதம்வரையுள்ள சருசர பிரபஞ்ச வஸ்துக்களும் அதுதான் அதானது ஆமையைப்போல் மூலமாயை யானது அய்ந்து அவ யவங்களோடு கூடிப் பிரணவ சுரூபமான பரமாத் மாவை அந்தரங்க சங்காகமாய் மறைத்து வைத்துக் கொண்டு காலசத்தி ரூபமாய் அய்ந்தவயங்களோடு கூடிய ஒரு சுரூபமாக இருக்கிறது. அய்ந்தவயங்களா வது தூலம், சூக்குமம். காரணம், மகா காரணம், முத்தி இதுகளில், தூலமானது; பூமி, ஜலம் அக்கினி, வாய்வு, ஆகாசம், சூக்ஷமாவது, கெந்தம், ரசம் ரூபம்,

பரிசம், சத்தம், இதுகள் அய்ந்துமாம, காரணமாவது அகங்காரம் அதானது சாத்தீக குணம், ரூசசகுணம், தாமசகுணம் இதுகள் மூன்றும், மூலப்பிரகிருதி, ஒன்றும், ஜீவாத்மா, ஒன்றும் ஆகயிதுகள் அய்ந்துமாம். மகாகாரணமாவது, ஜீவ பரசிவம், இதுகள் மூன்றுமாம். முத்தியாவது பரசிவம் இரண்டும் ஏகமாய் யிரண்டாகக் கலந்து இருப்பதாம்

ஓ மனமே கேள் ;— இப்படிக்கொத்த மகிமையுடைய பஞ்சாக்ஷர சுரூபமே கடவுளின் சுரூபம், இதின் பொருளை அகங்காரத்தை விட்ட ஸ்ரீ சற்குருவின் திருவருளால் அறியக்கூடும். அருளை அடையும் உபாயம் எப்படியெனில், இந்திரியங்களை யெல்லாம் அஞ்செழுத்திலே அடக்கி அஞ்செழுத்தை அந்தக் காணத்தில் அடக்கி அந்தக்கரணத்தை முக்குணத்தில் அடக்கி முக்குணத்தை மூலமாயையில் அடக்கி, மூலமாயை அருள் பரத்தில் அடக்கி, அருள் பரத்தை, பரஞ்ஜோதியான, சிவதுரியத்தில் அடக்கி, பார்த்தால், பஞ்சாக்ஷரத்தின் பொருள் விளங்கும். பஞ்சாக்ஷரமானது நமசிவய, என்னும் அஞ்செழுத்தாம். இதுகளில் நகாரமானது, பகவானுடைய,

சிசினம், அதானது, பிர்ம்மாவும் சரஸ்வதியுமாம். இரண்டாவது. மகரமானது, பகவானுடைய நாபி, அது விஷ்ணுவும் லெக்ஷிமியுமாம். மூன்ருவது சிகரமானது, பகவானுடைய யிருதயம், அதானது, ருத்திரனும பார்பதியுமாம், நான்காவது வகரமானது, பகவானுடையவாய், அதானது மகேஸ்வரனும், மகேஸ்வரியுமாம், அஞ்சாவது, யகாரமானது, பகவானுடைய சிரசு, அதானது சதாசிவமும் மனோன் மணியுமாம், பகவானுடைய திருவடியானது ஓங்கா ரம், இந்தப்படி, மகாமகிமையுடைய பஞ்சாக்ஷர சுரூபத்திலிருந்தும், தோற்றப்பட்டதாம் இந்த உல கம், அதானது சூரிய கிரணத்தினல் காணப்பட்ட கானல் ஜலம் போலும் மனோ பிருந்தியாம். பலவித பேதமாகக் கண்ட சொர்ப்பனம் போலவும், இந்திர ஜாலகநுடைய மாயாவித்தையைப்போலவும், சிர்ப் பிரகாசத்தியானல் தோற்றப்பட்ட மாயா ஜாலமாம் இந்த உலகம் முடிவில் சரீரம் அஞ்செழுத்திலே லயம் அடையப்போகிறது, ஆதலால் அஞ்செழுத் தையும் நெஞ்சிலே திரமாய் நிருத்தி, அந்த அஞ்சு எழுத்தையும் ஆமையைபோல் பிரணவத்துக்குள்ளே

அடக்கி தியானம் செய்து பழகிவருவதானல், ஆண வம், மாயை, கர்யம், மூன்றும் அடங்கும், அங்ஙனம் ஆணவம், மாயை, கர்மம் மூன்றும் அடங்கிவிட்டால் ஜீவன் பரத்தோடொத்து, பரமாத்மாவில் அய்க்கிய மாய், சிவசத்தி இரண்டும், இரண்டறக்கலந்து எக மாய், துரியபர பரிபூரணாநந்தமாய் விளங்குவதாம் பஞ்சாக்ஷரத்தின் பொருளென்று மறிக. இந்தப்படி கிரம்மாய் மும்மலங்களும போக்கி யருள் பெற்று, சுரூப சாக்ஷாத்காரமடையும் பொருட்டு பூர்வ புண் ணியம் விசேஷமாய் இருக்கவேண்டும். இதைத்தவிர இந்த உலகத்தின் கண் உள்ள மனிதர்களில் அநேக ஜனங்கள் தாமசகுண விருர்திகளாய் பிருகிர்த ஜீவ ருய சரீர போஷணத்தில் பேருசையுடையவர்க ளாய் மிருக ஜாதிகளைப்போல் மகா பாபிகளாய், வர்ண சிரம குலாசார தர்ம கர்மாதிகளும் மரியாதையும், நஷ்டமாய், குரு, சுருதி, ஸ்மிரிதி, வேதம், சாஸ்திரம் புருணம், இதிகாசாதிகளும், இதுகளில் கூரப்பட்ட சன்மார்க்க நடவடிக்கையும், தவறி, கலியினுல் அந்த காரத்தில் பட்டு, கொலே, களவுகள், காமம், குருநி ந்தை முதலான துஷ்கரிமிகளாய், துருசை மேலிட்டு, அந்த சமுசாரமான, பாழுங் கிணற்றில், விழுந்து

அலையும் ஜனங்கள் அதிகமாய் அந்தகர்களாயும், அதோமுகமாய், ஆத்ம துரோகிகளாயும் அந்தகனுக் காளாயும் இருக்கிறார்கள். இதற்கு நாம் என்ன செய்வோம். ஆனாலும் இப்போது கலியைத்தான் வெகுமானிக்கவேண்டும். ஆதலால் எல்லோரும், கலியை தன்னை வணங்கவேண்டு மென்று கேட்டுக் கொள்ளுகிறேன். ஏனென்றால் அதிக துக்ககரமா யிருக்கிற கலியை நாசமாக்கும் பொருட்டு எது கர்மத்தினாலு முடியாது. அதானது பாப கர்மத்தை எல்லாம் தூரத்தள்ளி நல்ல புண்ணிய கர்மங்களை செய்தாலும் பாபமே மேலிடும், அப்படி வருவது ஏதென்றால், கலியுடைய மகிமை அவ்வள விருக் கிறது, அது கலிதர்ம மென்றறிக.

மனம்:— ஓ சுவாமி! இந்தப்படி இந்த கலியுகத் தில், கோரமூட விர்த்திகளாய், அந்நியாயமும் அதர் மமும் அக்கிரமமும் அதிகமாய் இருக்கும், இந்த கலிசகிதமான உலகத்தில் எந்த கர்மம் செய்தால் பாபம் தொலையும், புண்ணியம் மேலிடும், என்றும் நின் திருவடி திருவுளம் பெற்று அடியேனில் ஜீவ காருண்யமுண்டாய் திருவாய் மலர்ந்தருள வேண்டு மென்று கேட்க அறிவு கூறியது.

ஓ மனமே கேள்:— மாயாகுணபேதமான தாமசகுணமாம் கலி, ஆதலால் மாயாகுண பேதமானது மனம் ஆதலால் தாமசகுணமிருந்தமட்டும் மனந்தான் கலி, என்றும் அறிக. குணபேதத்தால் மனம் சங்கல்ப்ப விகல்ப்ப மடைந்தது அந்த சங்கல்ப்ப விகல்ப்பத்தால் வந்தது காமம், காமத்தால், கர்மம், கர்மத்தினுல் கலி, கலியினுல் கொல்லும் கோபம், கோபத்தினுல் ஆத்மசூன்யமாதலால், கலிவந்தடைவதர்க்கேதுவான தாமசகுண கர்ம்மத்தையும் ஆசை வந்து அடைவதர்க்கேதுவான, ருசசகுணகாமிய கர்ம்மத்தையும், குரோதலோப, மோகாதிகளையும் துரத்தி, நிருசையை நிலைநிருத்தி சிரசால்வணங்கி, முன்கூரியபடி பஞ்சாக்ஷரத்தையும் ஸ்ரீ சர்குருவின் திருவடி மறவாமல் இருதயத்திலிருத்தி, நிர்சலமாய் இருந்து, தியானம் செய்து பழகிவருவதானுல், அனுதியாயுள்ள பாபமெல்லாம பஞ்சுபோல் பறக்கும்; பாபம் அகலவே புண்ணியமேவிடும், புண்ணியமேவிட்டால் கலி நாசமாம், புருஷார்த்த மடையலாம்,

ஓ மனமே கேள்:— உண்மையாய் இன்னும் பஞ்சாக்ஷரதியானம் செய்யும்பொருட்டு ஆனமட்டும் மனதை நிலையிலிருத்தி சமமாயுள்ள ஓர் ஆசனத்தில்

சுகமாய் இருந்து ஊர்த்தமுகமாய் நாசிகாக்கிரத்தில் பார்த்து பிரணவ சுரூபமான ஸ்ரீசற்குருவின் திருவடி சித்தத்திலிருத்தி சிரத்தாபக்தி விஸ்வாசத்துடன் மனசினால் தியானிக்கவும், அருளான பஞ்சாக்ஷரத்தை வாக்கினால் ஜெபிக்கவும் பூஜாமுதலிய கைங்கரியங்களை காயத்தினால் செய்யவும் இந்தப்படி திரிகரணங்களைக்கொண்டு தினசரியும் அப்பியாசம் செய்து பழகி வருவதானால் திரிகரணங்களும் அடங்கும்; திரிகரணங்களும் அடங்கிவிட்டால், திரேதாயுகம் பிறக்கும், திரேதாயுகமானது, சாந்தம், திரேயுதாயுகம் வந்தால், கலி அடியோடே நசிக்கும், கலிநாசமானால், மும்மலங்களுமறும், மும்மலங்களுமற்றால், அருள்பெற்று பிர்ம்மாநந்தமாய் இருக்கலாம், சந்தேகம் வேண்டாம்

ஓ மனமே கேள்:—இதைத்தவிர இந்த கலியுகத்தில் கலிசபையைதாண்டி மோக்ஷமடையும் பொருட்டு வேறொரு மார்க்கமுங் கிடையா; ஏனென்றால் தாமசகுணம் அதிகமான, கலிதோஷத்தால் எக்கியம் தானம் தபசு முதலானகர்மங்களும் வர்ணாசிரம குலாசார தர்மங்களும் நஷ்டமாய் வந்துவிட்டது, ஆதலால் பகவன்நாம சங்கீர்த்தனங்களைக் கொண்டும் சாதுக்களின் பாதபூஜையைக் கொண்டும்

பக்தி விசுவாசங்கொண்டும் கலிசபையைத்தாண்டி மோக்ஷமடையலா மென்றும், புருணயிதிகாசாதிகளி லும் கூரியிருப்பது சத்தியம்; இதற்கு அதிகாரிகள் யார் என்ருல் சதுர்வர்ணங்களும்; ஸ்ரீகள் சண்டாளர் களுக்கும், அதிகாரமுண்டு ஆனுலும் இந்தகலியுக த்தில் பக்தி வருவது மகாஅபூர்வம்; கிருசையாய் பக்தி உடையவாளுக்கு இந்தகலியுகம் மெத்தவும் நன்று நன்று.

மனம்:—ஓ சுவாமி வைதீகமான வர்ணுசிரம குலாசாரதர்ம்ம கர்மத்தினுல் அடையும் பலனுவது, சரீரத்துக்கோ ஆத்மாவுக்கோ என்றுகேட்க அறிவு கூரியது:—

ஓ மனமே கேள்:— எதார்த்தமாய் அயுறிம் போது சரீரத்துக்கு மில்லை ஆத்மாவுக்கு மில்லை; ஆனுலும் வைதீகமான குலாசார தர்ம்மங்களை எல் லாம் சன்மார்க்கமாயிருந்து, அகங்காரத்தை விட்டு, அந்தக்கரணம் பரிசுத்தமாகும் பொருட்டு சொன் னதல்லாமல் வேரில்லை, ஆனுலும் அப்படியே ஆசா ரமிருந்தபட்டும் அகங்காரமுமிருக்கும், ஆதலால் அகங்காரத்தை விட்டுவிடும் பொருட்டு, நிஷ்காம

தர்ம கர்மத்தினாலும், அப்பியாசப், யோகத்தினாலும் சாதுசங்கப்பழக்கத்தினாலும் சித்தம் பரிசுத்தமாய், அபேதமானால், முன் கூறினபடியுள்ள வர்ணாசிரமம் குலாசார தர்மகர்மங்களெல்லாம் தானே நசிக்கும் சந்தேகம் வேண்டாம். சரீரமானது நிச்சேட்டமான மரக்கட்டைக்கு சமானமாம்; ஆத்மாவானது நிஷ்க்கிரியநிர்ச்சலன் ஆதலால் இதுகள் இரண்டுக்கும் குலாசாரதர்மம் சம்பந்தமில்லை.

ஓ மனமே கேள்:— அஞ்ஞானத்தினால் சாசுதமாய் காணப்பட்ட, விஸ்வரூபமானது சாசுதமல்ல, நச்சுரமாமென்றும், சாசுதமானது பரமாத்மாவென்றும் நிச்சயமாய் ஸ்ரீ சற்குருவினால், அரியுமானால், முன் கூறிய வர்ணாசிரம குலாசார தர்மகர்மங்களெல்லாம் பொய்ப்புலன்களால் செய்வதாம், அதுகளெல்லாம் பொய்பொய்யாமென்றும் உபநிஷத்துக்களும் மகத்துக்களும் கூறியது சத்தியம் சத்தியம்: ஆனாலும் வர்ணாசிரம குலாசாரதர்மத்தோடு கூடியிருந்தும் தவறாமல் நிஷ்காம்ம கடவுளை உபாசித்து சேவித்து பழிகிவருவதானால் சாலோகாதி சரீரமுத்திகிடைக்கும், சரீரமுத்தர்களுக்கெல்லாம், புனர்

ஜென்மமுண்டு; இதைத்தவிர, அதிவருணாசிரமத்தி லிருந்தும், கடவுளை உபாசித்தால் புனர்ஜென்ம மில்லாமல் விதேகாநந்த சாயுச்சிய முத்தி யடையலாம் சந்தேகம் வேண்டாம்.

மனம்:— ஓ சுவாமி! இந்தப்படி முன் கூறிய, வர்ணாசிரம குலாசார தர்மங்களெல்லாம் ஏதார்த்த ஞானத்திற்கு விரோதமாமென்றும் ஏதார்த்தஞான ததைபார்க்குமளவில், அவனிமுதல் ஆகாசம் வரையி லுள்ள சர்வ பூதங்களும் நச்சுரமாமென்றும் அறிந்தேன்; ஆனாலும் இதுகளிலுள்ள அகமமதை அணுவளவு மில்லாமல், மனம் பரிசுத்தமாக்கி, பற்றில்லாமலிருந்தால் போராதா? காயத்திலும் வாக்கிலும், ஆசாரமிருந்ததினால் பற்று உண்டாகுமா என்று கேட்க, அறிவு கூறியது:—

ஓ மனமே கேள் :—முக்கரணங்களும் ஒத்து உபாசனை செய்தால் அல்லவோ, முக்கரணங்களும் அடங்கும், முக்கரணங்களும் அற்றால் அல்லவோ மும்மலங்களும் அறும். மும்மலங்களும் அற்றால் அல்லவோ அன்பும், ஆசானுடைய அருளும்,

எதார்த்த ஞானமு மடையக்கூடும், ஆதலால், முக்கரணங்களும், காயத்திலுள்ள அபிமானம் முதலாவது விட்டுவிடவேண்டும், இரண்டாவது வாக்கு பரிசுத்தமாய் இருக்கவேண்டும், மூன்றுவது மனதை யடக்கவேண்டும், இதுகள் மூன்றும், சமரசமாய் அடக்குவதே சத்தியம். இதைத்தவிர மனம் ஒன்று மாத்திரம் பரிசுத்தமாய் இருந்தும் காயம் வாக்கு அடக்கமில்லாவிட்டால் மனம் எப்படி பரிசுத்தமாய் இருக்கும். இருது? ஏனென்றால், காயத்திலும் வாக்கிலும், அகங்காரம் இருந்தமட்டும், மனசுக்கும் இருக்கும் சந்தேகமில்லை; ஆதலால் முக்கரணங்களும் சமமாய் அடக்குவதே யுக்தி, இதினால் அருள் பெற்று எதார்த்த ஞானம் அடையலாம்.

ஓ மனமே கேள் :—மனம பரிசுத்தமானாலும் வாக்கு, காயங்களும் அடக்காமல் சம்சார சாகரத்தின் நடுவில் ஆழ்ந்து கிடந்தும், .வாசாஞானம் பேசுவது, கபட ஞானமென்றும் அறிக. திரிகாரணங்களும் ஒத்து பேசுவதும், தொழில் செய்வதும், நினைப்பதும், மெத்தவும் நன்று, நன்று, இதுசத்தியம். இதைத்தவிர, வாக்கிலே ஒன்று தொடுப்பாய், மன

திலே ஒன்று நினைப்பாய், காயத்தினால் பலவிதம் செய்வாய், இது நம்பக்கூடாது.

மனம்:— ஓ சுவாமி! கர்ம புண்ணியத்தினால் வந்ததாம் மானிட சரீரம், ஆதலால், இன்னும் கர்மம் செய்து.பழகி வருவதானால், இனிமேலும் ஜென்மம் வருதா? கர்ம்மமானது பெந்தம், அதைவிட்டு விடுவதே மோக்ஷம் என்று திருவாய் மலர்ந்தருளி இருக்கிறது- ஆனாலும் சிலாக்கியமான கர்மத்தை விட்டால், மோக்ஷங் கிடையாதென்றும், சில மகத்துக்கள் சொல்லுவார்கள், இதுகளில் எதை நம்ப வேணுமென்று கேட்க, அறிவு கூறியது:—

ஓ மனமே கேள்:—கர்மமாவது திரிவிதமாயும், அது நவவிதமாயும் இருக்கிறது, அதாவது புண்ணியபாபம், மிசரம் மூன்று; சுகர்மம், அகர்மம், விகர்மம், மூன்று, ஆகாமியம சஞ்சிதம், பிராரத்துவம் மூன்று; இந்தப்படியாக கர்ம்மம் ஒன்பது விதம்; இதுகளில் முதலாவது பாபகர்மத்தையும், மிசிரகர்மத்தையும், தூரதள்ளி வர்ணாசிரம, குலாசாரத்திற்கு, தகுந்தபடி அதிகாரம்போல் சுகர்மங்களை, செய்வது சிலாக்கியமென்றும், வேதங்களில் கூறப்

பட்டது சரி, ஆனாலும, போகத்தில் இச்சையும், சம்சாரமும் விட்டு, வைராக்கியத்துடன், சர்வகர்ம்ம மும் முடித்து, பெரியவாளையடுத்து, சரணசேவை செய்வதே சிலாக்கிய மென்றும், இரண்டாவது உப நிஷத்துகளும் பெரியவாளும் கூறப்பட்டது சத்தி யம்.

ஓ மனமே கேள்:—முன் கூறியதில், அகர்மம், விகர்மம் இரண்டும் மகா பாபத்துக்கும் நரகத்துக் கும், காரணம்; சுகர்மம் ஒன்றே பரகெதிக்கு வழி, ஆனாலும் வர்ணாசிரமத்துக்கு தகுந்தபடி அதிகாரம் போல் சற்கருமங்களை செய்வதே சுகர்மம்; அப்படி செய்யாமலிருந்தது அகர்மம் தடமாறி பெய்வது; விகர்மம்; இதுகள் மூன்றும் விட்டு, ஸ்ரீ சர்க்குருவின் திருவருள்படி கர்மம செய்வது பரிசுத்தமான சுகர் மம். இதினால் பெந்தம் விட்டு புருஷார்த்த மடைய லாம், இதைத்தவிர பிருமணஜாதிகள், ராஜசேவை, வியாபார முதலாய இழிவானகர்மங்களை செய்தால், அது விகர்மமாம் என்றும், விதியில் நிஷேதமா மென்றும், சந்தியாவந்தனம் காயத்திரி முதலான ஜெபதபங்களை சூத்திரஜாதிகள் செய்வது விகர்ம

மாம், இதினுல் நரகமேபலமாம் என்றும் முன் கூறி யிருக்கிறது.

ஓ மனமே கேள்:—கர்மேந்திரியத்தின் தொழி லாவது, கர்மம் கர்மத்துக்கு காரணம் ஞானேந்திரி யம், ஞானேந்திரியத்துக்கு காரணம் அந்தக்கரணம் அந்தகரணத்துக்கு காரணம் ஜீவன் ஆதலால், இந்திரியங்கள் பத்தும், அந்தகரணநான்கும், இருந்த மட்டும், கர்மமிருக்கும, கர்மமிருந்தமட்டும் ஜீவன் கர்மபலத்தை யநுபவிப்பது சுபாவீகம்; இதுகளுக் கெல்லாம் சாக்ஷியாவது, பரமாத்மா; இந்தப்படி இந்திரியங்கள் பத்தும், அந்தக்கரணம நான்கும், போகத்தில் ஆசையிருந்தமட்டும், கர்மம் சிலாக்கிய மாக எண்ணுவார்களள; அதனுல் ஜீவன் கர்யபல போக்த்தாவாய் தோற்றுவது சுபாவீகம். நிருசை யாய் இந்திரியங்கள் பத்துமடக்கி, அந்தக்கரணம் பரிசுத்தமாக்கினுல் கர்மம் அடியோடே நசிக்கும். கர்மம் அடியோடே நாசமானுல்; கர்த்தா போக்த்தா என்கிற அகந்தையும், அகமமதையும், அடியோடே நசித்துபோகும், இதினுல் ஜீவன்முத்தியடையலாம்; சந்தேகம்வேண்டாம்.

ஓ மனமே கேள் :—பக்தி விசுவாசமாய் முக்கரணங்களைக் கொண்டும கடவுளின் திருவடி சேவை செய்தால் முக்கரணங்களும் அடங்கும். முக்கரணங்களும் அடங்கிவிட்டால், காயமேது, கர்மமேது, பெந்தமோக்ஷ பேதாபேதம் ஏது? நான் என்கிற அகங்காரமாவதேது? நாமரூபாதி சமஸ்தவஸ்த்துக்களும் அடங்கிஇருக்கும், யிதைதவிர போகத்தில் ஆசையும், குணமூன்றும், முக்கரணங்களும் இருந்தமட்டும் காயகர்மங்களை சிலாக்கியமாய் எண்ணுவார்கள், குணமூன்றும், முக்கரணங்களுமிருந்தமட்டும் கர்மமிருக்கும் கர்மமிருந்தமட்டும், காயத்துக்கு ஜனனமரணாதி நரக சொர்க்க சுகதுக்கங்களு மிருக்கும். ஆதலால, அன்னியாயமாய் இந்த உடலை நம்பாமல் ஞாயமாய்ப் பெரியவாளைபடுத்து, ஞேயமாயுள்ள பரமாத்மா வினையறியும்பொருட்டு பெரியவாளையடுத்து, சிரத்தாபக்தி விஸ்வாசத்துடன் அகங்காரத்தையும், குண கர்மங்களையும் தூரத்தள்ளிவிட்டால், ஆத்மாநந்தம் விளங்கும்; ஆத்மாநந்தம் விளங்குமானல், விஞ்ஞானம்வரும்' விஞ்ஞானம் வந்தால் மெஞ்ஞானம்விளங்கும், மெஞ்ஞானம் விளங்குமானல், ஜீவாத்மாவேபரமாத்மா, பரமாத்மாவே ஜீவாத்மா, இந்தப்படிசமரசமாய் ஜீவாத்மா

பரமாத்மாவைபார்க்கும் அளவில். பரமாத்மாவை தவிரவேறே ஜீவாத்மாஇல்லை என்பது நிச்சயமாய் மெய்விளங்கும்; அங்ஙனமெப்படி எனில், ஒருவஸ்துவை சுட்டிபலநாமம் சொல்வதுபோல், ஜீவாத்மா என்றும், ஆத்மாஎன்றும், பரமாத்மாஎன்றும், சொல்வது பரியாயநாமம்; பரியாயநாமாவது, ஆகாசமானது ஏகம், அதற்கு ஆகாசம், மகாகாசம், குடாகாசம், குக்ஷியாகாசம், அந்தரிக்ஷம், இத்தியாதிபலநாமங்கள் சொல்வதுபோல, ஏகமாய்இருந்த ஆத்மாவுக்கு பலநாமம் சொன்னதல்லாமல்,வேறில்லை. எதார்த்தஞானம் அடைந்தவாளுக்கு, ஜீவாத்மா பரமாத்மா ரெண்டும், ஏகமானாலும், உலகர் இரண்டாய் சொல்வதர்க்கு, காரணம் அஞ்ஞானம் ஒன்றேயாம், சந்தேகம் வேண்டாம், ஆதலால், அஞ்ஞானம் நீக்கியருள்க்கண்ணால் பார்த்தால், ஆத்மா ஏகம்.

ஓ மனமே கேள்:—பரமாத்மாவானது ஏகமாயும் நித்தியமாயும், நிர்விர்த, நிர்மோக, நிர்விஷய, நிரந்தரமாயும், நிஷ்களமாயும், நிர்வாச்சியமாயும், நிரூபமாயும் நிருதாரமாயும், நிர்வேத்தியமாயும், நிர்விகர்ப்பமாயும் நிர்த்தோஷமாயும், நிர்லீனமாயும், நிரந்தரமாயும், நிர்த்தொந்தமாயும், நிர்வேத, நிர்வேத்திய, நிர்மலமா

யும், நிர்க்கதமாயும், நிர்முகத்தமாயும், நிர்ம்மூலமாயும், நிரஞ்சனமாயும், நிர்ச்சங்கமாயும், நிஷ்காமநிர்வாதமாயும், நிர்க்குணநிருமய நிற்வாணமாயும், நிற்வயிரமாயும், நிருசர்யமாயும், நிருகாரமாயும், நிரீகமாயும், நிர்ச்சல நிருகுலமாயும், நிரதிசயமாயும், சச்சிதாநந்தசமரசமாயும், பரிபூரணபரஞ் ஜோதியாயும், விளங்குவதாம் ஆத்மவஸ்து வென்றறிக. இந்தப்படி ஞேயமாய் உள்ளபரமாத்விவினை, ஞாயமாய் அரியும்போது, மாயாசம்மந்தபயமெல்லாம், நீங்கி ஜீவன்முத்தனாய் பிர்மாநந்தபதம் அடையலாம், சந்தேகம் வேண்டாம்,

ஓ மனமே கேள்:—அநேக ஞானநூல்களைத் தேடிப்பார்த்து அலையாமலும், பலவிதமானகர்மங்களைச்செய்து, அதுகளில் பெந்தப்படாமலும், நான் செய்தேன் என்கிற அகங்காரமும், அகமமதையும், விட்டு மனதையடக்கும் உபாயத்தைப்பாரும், மனம் அடங்கிவிட்டால், அதுவேஜீவன்முத்தி, இந்தப்படி மனம அடங்கும் பொருட்டு, உபாயம்முன்கூறினபடி ஸ்ரீ சர்க்குருபக்தி ஒன்றேயாம் என்றும், பக்து முத்தினல் அது ஞானபக்குவமாம் என்றும், அறிக. ஞானமாவது இரண்டுவிதம்.—அதானது பரோக்ஷ

மென்றும் அபரோக்ஷ மென்றும் அறிக. இதுகளில் பரோக்ஷமாவது இறைவனருளாலறிவதல்லாம், அபரோக்ஷமாவது அந்த பரோக்ஷத்தினால் அசைவற்ற ஆகாசம் போல், ஏகமாய் பரிபூரணானந்தமாய் விளங்குவதாம் அபரோக்ஷ ஞானமென்றறிக.

இதைகேட்ட மனம்:—ஓ சுவாமி! ஏகமாய் இருந்தநிர்மலபிர்மத்தில், பரோக்ஷமென்றும், அபரோக்ஷமென்றும், இரண்டுவிதமாகவந்த காரணமென்னவென்றுகேட்க அறிவு கூறியது:—

ஓ மனமே கேள்:—ஏகமாயுள்ள சுத்தபிர்மத்தில், அபின்னமாயிருந்த, சிற்சத்தியின் பிரகாசமானது, மாயை மாயாசிருஷ்டியானது, ஸ்ரீமூர்த்திகளுமாம், ஸ்ரீமூர்த்திகளால் சிருஷ்டிக்கப்பட்டதாம் ஜெகத் ஜீவர்களெல்லாம்; ஜீவசிருஷ்டியானது, ருகத்துவேஷாதிசம்சாரங்கள் ஆதலால், இந்தப்படி சம்சார சாகரத்தில் பட்டு அலையும் ஜீவர்களுக்கெல்லாம், பெந்தமோக்ஷம் இரண்டுக்கும் காரணமாய் எழு அவஸ்தை; இதுகளில் பெந்த ஏதுவானது, அஞ்ஞானம், ஆபரணம், விக்ஷேபம், இதுகள்மூன்றுமாம்; இனி மோக்ஷ ஏதுவானது, பரோக்ஷம், அபரோக்ஷம், அனர்

த்தநிவர்த்தி, ஆநந்த பிருப்தி, இதுகள்நான்குமாம்.

இதை கேட்ட மனம்:— ஓ சுவாமி இந்தப்படி எழுஅவஸ்தையின் சுருபமாவதென்ன? இதைவிட்டு அத்விதபதம் அடையும் மார்க்கம் என்னவென்று கேட்க அறிவு கூறியது:—

ஓ மனமே கேள்:— முன்கூறிய எழு அவஸ்தையில், பெந்தத்திற்கு ஏதுவானது, அஞ்ஞானம், ஆணவம், விக்ஷபம்; இதுகளில் அஞ்ஞானம் என்பது, ஆணவம; ஆணவமென்பது; மாயை; விக்ஷேபம் என்பது கர்மசங்கல்ப்பம், இனி மோக்ஷ ஏதுவானது, பரோக்ஷம் அபரோக்ஷம், அனர்த்தநிவர்த்தி, ஆநந்தபிருப்தி, இதற்கு உதாரணம்.

ஓ மனமே கேள்:— பத்துபேர்கூடி ஓர் வழி போகிறசமயம், மத்தியில் ஓர் ஆறு இருந்தது; அந்த சமயம் பத்துபேரும் ஒன்றாக ஆற்றை தாண்டியானபின், அதில் ஒருவன் பத்துபேரும் சரியாக இருக்கிறதாஎன்று எண்ணிப்பார்த்தான்; அப்போது ஒன்பதுபேரைஎண்ணி அதில் ஒருவனைக்காணவில்லை; இந்தப்படி பத்துபேரும் எண்ணி எண்ணி பார்த்தபோதிலும் ஒருவன் குறைவாய் இருக்கிறது, அய்யையயோ ஆறு

தாண்டியசமயம் ஒருவன் ஜலத்தில் வீழ்ந்து நாச மாய் போய்விட்டதென்று பரிதாபபட்டு அழுது கொண்டிருந்தார்கள். அந்த வேளையில் அதவா வேறொருவன்வந்துஒன்பதுஎன்றுஎண்ணிக்கொண்டு இருந்தவனை முதலாக எண்ணிப்பாருமென்று சொன் னதை கேட்டு தன்னை முதலாக எண்ணிப்பார்த்தள வில் பத்துபேரும் சரியாய் கண்டு, சந்தோஷமனடந் தது.

ஓ மனமே கேள்:— பத்துபேரில் ஒருவன் முத லாவது தன்னை எண்ணாமல் ஒன்பதென்றெண்ணி யது அஞ்ஞானம். அதில் ஒருவன் நாசமாய்போய் விட்டது என்று தோற்றியது ஆபரணம். அதினுல் துக்கப்பட்டு அழுதுகொண்டிருந்தது விக்ஷேபம். அந்தசமயம் அதவாதொருவன் வந்து பத்துபேரை யும் சரியாக காட்டி சந்தோஷமடைய செய்தது பரோக்ஷம். இப்போது பத்துபேரும் சரியாக இருக் கிறது இனிமேல் நமக்கு நாசமில்லை என்று கண்டது அபரோக்ஷம். பொய்யானதுன்பம் நாசமாய் போய் விட்டது. இனிமேல் பிறப்பில்லை என்கிற நிச்சய மானது அனர்த்த நிவர்த்தி; நித்தியாநந்தமாயுள்ள பாமாத்மாவினிடத்தில் அன்புற்று ஐக்கியமாய்

இருப்பதுதான் ஆநந்தபிருப்த்தி என்று அறிக.

ஓ மனமே கேள்:— சர்வாந்திரியாமியாயும், சர்வசாக்ஷியாயும், சச்சிதாநந்த சுரூபமாயும், சத்திய மாயும், நித்தியமாயும், பரிபூரண பரமஜோதியாயும் உள்ள பரமாத்மாவை தன்னிடத்தில் பாராமல் இருக் கிறதுதான் அஞ்ஞான மென்றும், தத்துவங்களை எண்ணி எண்ணிபார்த்தும், தன்னை காணாமல் இருக் கிறது ஆபரணம்; ஆத்ம சூன்னியமாய் ஆத்மா இல்லை இல்லை என்றும் துக்கப்பட்டு அழுதுகொண்டிருக் கிறது விக்ஷேக்ஷபம். அப்போது அதவா ஒருவர் பூர்வ புண்ணிய விசேஷத்தினால், பரமாசாரியருய் வந்து சருசாத்துக்கும் அந்தரியாமியாயும் சர்வ சாக்ஷி யாயும் இருந்த, பரமாத்மாவை எண்ணி அதில் தன்னையும் காட்டி தெளிவடைய செய்தது பரோ க்ஷம். பரோக்ஷத்தால், அனுபவித்தறிவதாம் அபரோ க்ஷம்; இந்தப்படி உண்மை சொல்லாதவர் குருவல்ல; குருவருள் வாக்கியத்தை உண்மையாக நம்பாதவன் ஶிஷ்யனும் அல்ல; பொய்வினை எல்லாம் தூரத் தள்ளி, மெய்யறிவாய் இருந்தவர்தான் சத்குரு. சர்வ தர்மகர்மங்களும் விட்டு, குருவை நம்பி பக்தி விஸ்வாசத்துடன் அடுத்தவன்தான் ஶிஷ்யன்; இந்தப்

படி குருசிஷ்யர்களாயிருந்தும், ஆத்மாவினை ஆத்மாவைகொண்டறிவதே எதார்த்த ஞானமென்றும், இதனால் ஜீவன் முத்தனாய் விதேகானந்த கைவல்லிய பதம் அடையலாம் என்றும், நான்கு வேதங்களிலும் புராண இதிகாசங்களிலும், உபநிஷத்துகளிலும், மகத்துக்களும் கூறியிருக்கிறது, சத்தியம் சத்தியம் சத்தியம். நிருசையாய் இருப்பதே துக்க நிவர்த்தி; அருளால் அறிவதே நித்தியானந்தம்; நிததியாநந்தமாவது, விதேக கைவல்லியம்.

ஓ மனமே கேள்:—கேவலம் அவியக்தமாயும், லெக்ஷண சூன்னியமாயும், உள்ள பரமாத்மாவுக்கு மூன்று லெக்ஷணம் தோன்றி, அதானது சத்து சித்து ஆனந்தம், இந்தப்படியுள்ள சச்சிதாநந்த லெக்ஷணத்தை, யார் அறிவார்கள் என்றால், இதுகளில் சத்தானது சித்தை அறியும், சித்தானது ஆனந்தத்தை அறியும், ஆனந்தமானது ஜீவாத்மாவினை அறியும், ஜீவாத்மாவானது தன்னுடை அம்சமான அனாத்மவஸ்துக்களை அறியும், அனாத்மவஸ்துக்களானது, அந்தக்காரமாய் இருக்கிறது, ஆதலால் ஆத்மாவினை மறைக்கப்பட்டது அனாத்மவஸ்துக்களாம் என்றறிக. ஆதலால், அனாத்மவஸ்துக்களை எல்லாம் அறிவு

கொண்டு, ஆத்மாவிலடக்கி, ஆத்மாவினை, குருவருளால், பரானந்தத்தில் அடக்கி, பரமானந்தத்தை சித்தத்தில் இருத்தி, சித்தத்தை சத்திலேபார்த்து, சத்தும் அசத்தும் சதசத்தும் இல்லாமல், அவியக்தமாயும், லெக்ஷண சூன்னியமாயும், சத்தியமாயும், நித்தியமாயும், துரியமாயும், அதீதமாயும், நிர்ச்சல, நிஷ்கள, நிற்குண, நிருதாரமாயும், சர்வபரிபூரண சுயம் பிரகாசமாயும், விளங்குவதாம் பரமாத்ம வஸ்து.

ஓ மனமே கேள்:—ஜீவன் சப்தாதி விஷயத்திலுள்ள பிரியம்போல், ஆத்மாவில் பிரியம் வந்தால், சித்தம் பரிசுத்தமாயும், ஸ்ரீ சற்குரு பக்தி விஸ்வாசம் உண்டாகும்; ஸ்ரீ சற்குரு பக்தி விஸ்வாச மில்லாமல், அனேக ஞான நூல்களைப்பார்த்து, அகங்கொள்ளாமலும், சித்தம் பரிசுத்தமாக்குவதே, பிர்மக்கியானம்; சித்தம் பரிசுத்தமாக்குவது மகா பிரயாசம். சித்தம் அசுத்தமாக்குவது, பெண்கள் முதலான ருகாதிகள் மூன்றும், ஆனாலும் சித்தம் பரிசுத்தமாக்கும் பொருட்டு, ருகத்துவேஷதிகளுக் கேதுவான சம்சாரக்கூட்டங்களும், சுஜன பெந்துக்களிடத்திலுள்ள பிரியமும் வேரோடு பிடுங்கி தூரத்தள்ளிவிட்டு

அதிக கருணையும் பொருமையும், அருளும் பொருந்தின, ஒரு ஞானதேசிகரை அன்பாய் அடுத்து, உடல் பொருள் ஆவி மூன்றும் புண்ணிய பாப மிரண்டும் சத்தியமாய் தாரைவார்த்து, ஆண்டவன் அடிமையாய் பக்தி விஸ்வாசத்துடன் பாது காத்து பணிவிடை செய்து பழகிவருவதானால், சித்தம் பரிசுத்தமாகும். சித்தம் பரிசுத்தமானால் பசுபதி பாசமற்று, தத்துவ ஞானம் விளங்கும்.

ஓ மனமே இன்னும் கேள்:—எதைப்படித்தாலும் எந்த ரூபத்தை நினைந்தாலும் எத்தொழிலைச் செய்தாலும், அகங்கொள்ளாமல், எல்லாம் பிர்ம்ம சுரூபமென்கிற விஸ்வாசம் வந்தால், நானென்னதென்கிற அகந்தையும், அகமமதையும் அணுவளவானாலும் இருக்குமா? இராதென்பது நிச்சயம். சத்தியமாய் விசாரித்து பாரும், உன்னுடைய சந்தேகமெல்லாம் தீரும், ஆனாலும் பொய்யான அகங்காரத்தை, அஞ்ஞானிகள் மெய்யாக எண்ணுவது சுபாவீகம் அகங்காரமானது அசுத்த மாயாசத்தி; அந்த மாயா சத்தியானதும், பரமாத்மாவினுடைய அம்சமாம்; ஆதலால் அந்த மாயைக்கும் ஆத்மாவுக்கும, ஆதி மத்தியாந்தம் கிடையாது. ஏனெனனில் சூரியனும்

பிரகாசமும்போல், ஆத்மாவும் மாயையும் ஏகமாம் என்று அறிக. உதாரணம், பரமாத்மாவானது, கடல் போலேயும், மாயையானது அந்த கடலின் அலையைப் போலேயும், ஜெகத் ஜீவர்களும், திருமூர்த்தி முதலான தேவாதி தேவர்களும், அந்த கடலின் அலையில் தோற்றப்பட்ட நுரைகளைப்போலவும் காண்க.

ஓ மனமே கேள்:—கடலானதும் ஜலம், அலையானதும் ஜலம், நுரைகளானதும் ஜலம், அதுபோல் நிர்க்குண பிர்ம்மத்திலிருந்தும் தோற்றப்பட்ட மாயா குணசகிதமான, ஜெகத் ஜீவர்களும், திருமூர்த்திகளும் ஏகமாயுள்ள பர பிர்ம்மமாம், வேறில்லை. ஆதலால் சகுண நிர்க்குண மிரண்டும் ஏகமாய் பார்த்து, அசஞ்சலமான ஸ்ரீ குரு பக்தி விஸ்வாஸத்துடன் சேவிப்பது மகாபாக்கியம்; இதுவே எல்லாவற்றிலும் சிலாக்கியம்; இதனால் ஏமதண்ட பாசமும் நீங்கி: ஜெனன மரணாதி துன்பங்களும் நரகங்களும் தீரும்; அதுவுமல்லாமல் ஆனந்தம், ஆயிசு, கீர்த்தி, சித்திகளும், தர்மார்த்த காம மோக்ஷ மிதுகள் அடையலாம், சந்தேகம் வேண்டாம்.

ஓ மனமே கேள்:—முதலாவது சர்க்குணத்தை விட்டு நிர்க்குணத்தை சேவிப்பதற்கு, எல்லாராலும்,

அசாத்தியம்; பக்தி இல்லாமல் போனால் முத்தியுங் கிடையாது ஆதலால் நிர்க்குணத்திலிருந்தும், தோற்றப்பட்ட சகுணமும் வேறு அல்லதும் நிர்க்குணமாம் என்று அறிந்து அந்த சகுணத்தில் பக்தி விஸ்வாசமுடையவாளும், நிர்க்குணமாம் சந்தேகம் வேண்டாம். யாதொருவருனாலும், தன் உள்ளே பரமாத்மாவையும், பரமாத்மாவுக்குள் தன்னையும் பார்த்து உபாசிப்பதை, ஆத்மயோக சங்காரக மென்றும், எல்லா யோகத்திற்கும் முடிவானதென்று தார்ப்பரியம்; இப்படிக்கொத்த மகத்துக்கள் எதைச் செய்தாலும், எல்லாம பிர்மார்பணமாதலால், அதுகளெல்லாம் பரிசுத்தமாய், பர பிர்ம்மமாய் இருக்குமென்பது சத்தியம்.

இதைக்கேட்ட மனம் ஓ சுவாமி! ஜீவனுடைய லெக்ஷணமாவது யாது? ஜீவபாவனை விட்டுவிடா லெக்ஷணமாவது யாது? ஜீவபாவனை விட்ட லெக்ஷணமாவதுயாது? பரபிர்ம்மத்தின் லெக்ஷணமும் யாது? திருவாய்மலர்ந்தருள வேண்டுமென்று கேட்க அறிவு கூறியது:—

ஓ பரிசுத்தமுடைய மனமே கேள்—ஜீவ லெக்ஷணமாவது அளவிறந்த கோடி ஆகையால், அதை

ஒருவருக்கும் அறியக்கூடியதும் சொல்லத்தகுந்த தும் அல்ல; ஆனாலும் குருவருளால் அரிந்தமட்டும் சொல்லுவேன் கேளும். ஜீவலெக்ஷணம், அண்டசம், சுவேதசம், உர்பிச்சம், சருயுசம் இந்தப்படி நால் வகையோனி ஏழுவகைத் தோற்றம் எண்பத்து நான்கு நூருயிரம் கோடி ஜீவருசிகளில் பிரம்ம தேவன் முதல் கிருமிகிரிடாதிகளாயும் கல்பகவிரு க்ஷமுதல் திரணம்வரையுள்ள ஸ்தாவரஜெங்கமங்களா யும்சராசாரரூபமாயுமுள்ள சரீரத்தில் ஜீவர்கள் பஞ்ச கோசவிலக்ஷணனும் அவஸ்தாத்திரிய கர்த்தருயும் போக போக்தாவாயும் ஸௌபாப விகாரமுடைய தாயும் பசி தாகம் சுகம் துக்கம் ஜெனனமரணுதி துன்பமுடையதாம். இந்தப்படி அநேகவிதமான இன் ,,துன்பப்பட்டு பவசாகரத்தில் மூழ்கி இருகரையும் காணுமல் பரிதாபப்பட்டு அலேவதே ஜீவலெக்ஷண மென்றறிக். இன்னும் கேள்: ஜீவபாவனே விட்டுவிடா லெக்ஷமணவாவது முன் ஜீவலெக்ஷணத்தில் கூறின படியுள்ள சராசர சுரூபமும் ஏகரூபமாயும் விஸ்வ ரூபமாயும் பிரம்மாண்ட பஞ்சகோச விலக்ஷணனுய் ஏக ஜீவனுயும், ஜாக்கிரு வஸ்தையோடு கூடியும், பாலெனமமாயும் உள்ளதுதான் ஜீவ

னுடைய விட்டு விடாலெக்ஷணமென்றறிக. இனி ஜீவபாவனே விட்ட லெக்ஷணம் கேள்—நீரில் குமிழி போலவும் அக்கினியில் தூமம் போலவும் நூலால் படம் போலவும் மண்ணுல் குடம் போலவும் ஆத்மாவுக்குள்ளிருந்தும் ஆரோபமாய் தோற்றப்பட்ட மாயாகுணகாரியமான தேகாதிப்பிரபஞ்ச வஸ்துக்களே எல்லாம் ஆத்மாவுக்குள் அடக்கி, சுவபாவமான பின், ஜீவபாவனே விட்ட லெக்ஷணமென்றறிக. இன்னும் கேள்—பிரம்ம லெக்ஷணமாவது கிருஷ்டிஸ்த்தி சம்கா ரங்களுக்கு காரணமாயும் அகாரணமானதும் பரபிர்ம்மம் அவஸ்தாத்திரியங்களிலும் தேகேந்திரியாதிகளிலும் ஜீவனுயிருந்து விசேட்டிப்பதும் பரபிர்ம்மம். முக்குணத்துக்கும் உள்ளும்புறமும் பரிபூரணமாயும் சூத்திருத்மாவாய் விளங்குவதும் பரப்பிர்ம்மம்; மூலப்பிரகிருதி மகதத்துவ அகங்காருதிகள் சர்வமும் தானுய் அதில் சைதன்னியமாய் இருப்பதும் எல்லா வஸ்துக்களுக்கும் மூலமாய் உள்ளதும் பரபிர்ம்ம; சத்தினும் அசத்தினும் பரமாயும் நித்தியமாய் உள்ளதும் பரபிர்ம்ம; சூரியபகவான் உலகமெல்லாம் சேஷ்டிப்பித் தனுகளில் பிரகாசருபனுய் இருந்தும் நிபந்தனுயும் நிர்ச்சங்கனுயும்

லோகதத்துவங்களுக்கெல்லாம் சாக்ஷியாய் விளங்குவதுபோல் ஏகமாய் சர்வத்திலும் காரணம் பரபிர்ம்ம; சர்க்குணமாயும் நிர்க்குணமாயும் சர்குணநிர்க்குணமிரண்டு மல்லாமலும் வாக்கு மனக்காயங்களினுல் அறியக்கூடாததாயும், பரமாநந்த பரிபூரணமாயும், சுயஞ்ஜோதியாயும், விளங்குவதுமாம் பரபிர்ம்ம லெக்ஷணமென்றறிக.

ஓ மனமே! நீ முதலாவது இந்நூலின் ஆரம்பத்தில், பெந்த மோக்ஷமிரண்டும் ஆத்மாவுக்கோ சரீரத்துக்கோ என்று கேட்ட கேள்விக்கு சமாதானம் சொல்லுவேன் கேள்:—உதாரணம்—சரீரமானது பின்னுப்பிரகிருதி குணகாரியமாம் ஆத்மாவானது அபின்னுப்பிரகிரிதி காரியமாம், இவைகள் இரண்டும் கூடி இரண்டறக் கலந்திருப்பதுதான் அகங்காரம். அகங்காரம் இருந்தமட்டும் பெந்த மோக்ஷங்களிரண்டும், சத்தியமாய் உள்ளதாக தோற்றுமென்பது நிச்சயம், இதுகளிரண்டும் வேறு வேருகப் பிரித்து பார்க்குப்போது, பெந்தமேது மோக்ஷமேது? அதானது அகங்காரம் நாசமானுல் பின்னுப்பிரகிருதி காரியம் நசிக்கும். அங்ஙனம் பின்னுப்பிரகிருதி நாசமானுல் அகங்காரமேது? அஙகார

மில்லாவிட்டால் சரீரமேது? பெந்தமோக்ஷமேது? அங்ஙனம் சரீரத்துக்கு பெந்தமோக்ஷமில்லாவிட்டால் திரிகாலத்திலும் நாசரெகிதமான ஆத்மாவுக்கு பெந்தமோக்ஷமேது? ஆதலால் பெந்தமோக்ஷமிரண்டும் மாயையால் தோற்றுவதல்லாமல் அதுகளிரண்டும் எதார்த்தமல்ல. மாயை நாசமானால் ஆத்மா நிர்வாணமாம் என்று மறிக. அங்ஙனம் எப்படி எனில் பரமஞானிகளுடைய அபிப்பராயத்தை கேளும்—வாக்கு மனக்காய மூன்று மிருந்தமட்டும் சுருதிஸ்மிருதி வேதசாஸ்திரபுராண இதிகாசாதிகளும தேகாதி பிரபஞ்சவஸ்துக்களும் சத்தியமாய் தோற்றுவது சுபாவீகம். இதற்கு சந்தேகமில்லை. வாக்கு மனக்காயம் மூன்றும் அடக்கி அந்தக்கரணம் பரிசுத்தமானால்முன் கூறினபடி உள்ள சுருதிவேதாதிகளும் தேகாதிபிரபஞ்ச வஸ்துக்களும் சொப்பனசமானமாமென்றறிக; அங்ஙன ம்எப்படி எனில் சொப்பனம் கண்டுணர்ந்தபின் அந்த சொர்ப்பனத்தில் கண்ட வஸ்துக்களெல்லாம் பொய்யா மென்றும் அறிவது போல் எதார்த்த ஞானத்தினால் பார்க்குமபோது தேகாதி பிரபஞ்ச வஸ்துக்களும் சத்தியமாய் தோற்றுவது சுபாவீகம். இதற்கு சந்தேகமில்லை. வாக்கு

மனக்காயம் மூன்றும் அடக்கி அந்தக்கரணம் பரிசுத்தமானல் முன் கூறினபடி உள்ள சுருதி வேதாதிகளும் தேகாதிபிரபஞ்ச வஸ்துக்களும் சொர்ப்பன சமானமாமென்றறிக. அங்ஙனம் எப்படி எனில் சொர்ப்பனம் கண்டுணர்ந்தபின் அந்த சொர்ப்பனத்தில் கண்ட வஸ்துக்களெல்லாம் பொய்யாமென்றும் அறிவதுபோல் எதார்த்தகியானத்தினல் பாற்கும்போது தேகாதி பிரபஞ்சவஸ்த்துக்களெல்லாம்பொய்பொய். ஆனலும் ஸ்ரீ சர்க்குருவின் திருவருள் ஆனபின் சந்தேகம் எல்லாம் தீரும்; இது பரமரகசியமாம் என்பது சத்தியம் சத்தியம்.

ஓ மனமே கேள்:—முதலாவது சகுணத்தியானம் செய்து பழகிவருவதானல் அது சாரூப்பிய முத்தி; அங்ஙனம் சாரூப்பிய முத்தியடைந்து நிர்க்குணத்தியானம் செய்து பழகி வருவதானல் அது சாயுச்சிய முத்தி; ஆதலால் முதலாவது சகுணத்தியானம் செய்ய வேண்டும். அங்ஙனம் சகுணத்தியானமாவது எப்படி எனில்:- பஞ்சபூதங்களஞ்சும் மூலமாயை ஒன்றும் விந்து நாத மிரண்டும் ஆக எட்டும் ஏக சுரூபமாய் மாயாகுண சகிதமாய் கண்டு உபாசிப்பதை சகுணத்தியான மென்றும், இந்தப்படி சகுணத்

தியானம் செய்து பழகிவருவதானல் மனோலயமடை யும், மனோலய மடைந்தால் மாயாருண சகிதமாயுள்ள சகுணமும் லயமடையும்; மாயாகுணம் நாசமானல் நிர்க்குணத்தியானம் செய்து பரிபூரண பிர்ம்மானந்த பதமடையலாம், சந்தேகம் வேண்டாம்; ஆதலால் இதை ஆத்மயோக சங்காக மென்றும் மூன் கூறிய தின் தார்ப்பரியம். அரி அர நம சிவாய என்றும் அனவரதம் ஸ்ரீ சர்க்குருவை நமோ நமகா ஆத்ம யோக சங்காகம் சம்பூரணம். குருவருள் மகாவாக்கிய சாரமாமிது; சத்தியம் சத்தியம். ஸ்ரீ சற்குருவே நமோ நம:

## காம தகனம் கதை.

மனம்:—ஓ அறிவா இருந்த பரம்பொருளே! அடியேனுடைய விண்ணப்பமாவது இந்த உலக சிருஷ்டி கர்த்தா பிர்மாவாமென்று சாஸ்த்திரங்களில் கூறியது சரி, ஆனாலும் சிருஷ்டிக்கு மூலகாரண முண்டாவென்று கேட்க,

அறிவு:—ஓ மனமே கேள்:— இந்த உலகசிருஷ்டி க்கு மூல் காரணம் காமன்.

மனம்:—காமனுடைய உற்பத்தி ஸ்தானமாவது எது?

அறிவு:—நிஷ்களமான பரபிர்ம்மத்தி லிருந்தும் தோற்றமாம்.

மனம்:—அந்த நிஷ்களமான பரபிர்ம்மத்திலிருந்தும் பிறந்த காமன் எப்போது நாச மடையும்?

அறிவு:—நிஷ்களமான பரபிர்ம்மத்திலிருந்தும் பிறந்த காமன் கோடான கோடி கல்பகாலமானுலும் ஒரு காலத்தும் நாச மடையாது.

மனம்:—காமனை ஒருக்காலத்தில் சிவபெருமான் தட்சணுமூர்த்தியாயிருந்த சமயம் நெற்றிக்கண்ணுல் சுட்டதாக புராண இதிகாசங்களில் கூறியது மெய்யா பொய்யா?

அறிவு:—ஓ மனமே கேள்:— புராண இதிகாசங்களில் கூறியது மெய்தான்; அதுகளெல்லாம் பொய்யாமென்று நினைத்தவர்கள் அதோகதி யடையுமென்பது நிச்சயம். ஆனுலும் பரமசிவன் தட்சணுமூர்த்தியாயிருந்த சமயம் காமதேவன் தன்னுடைய பஞ்சாயுதத்தை யனுப்பியது சரி; அந்த சமயம் அந்த பஞ்சா

யுதத்திற்பட்ட தட்சணாமூர்த்தியும் மஹா மோகத்தை யடைந்து அந்த மகா மோகத்தினால் அதிக காமத்தையும் கொடுங்கோபத்தையு மடைந்து, அந்த கோபாக்கினியில் காமனுடைய தூல சரீரத்தை சுட்டாரென்று புராண இதிகாசங்களில் கூறியதின் தாத்பரியம்; ஆனாலும் அந்த காமதேவனுடைய சூக்ஷ்ம சரீரத்தையும் காரண சரீரத்தையும் சுட்டதில்லை என்பது நிச்சயம். ஏனென்றால், ஸ்தூலம் சூக்ஷ்மம், காரணம் என்று மூன்று சரீரமும் சராசர சீவர்களுக்கு முண்டு. ஆனாலும் அதில் ஸ்தூலசரீரம் அடிக்கடி நாசமடைந்தாலும் சூக்ஷ்மம், காரணம் இரண்டு சரீரமும் ஒரு காலத்திலும் நாசமடையாம லிருக்கிறது; அதினால் ஜனன மரணாதி சம்சார துன்பங்களுக்கு ஹேதுவான ஸ்தூல சரீரம் அடிக்கடி ஆவதும் அழிவதும் சுபாவீகம்; ஆதலால் அந்த காமனும் ஸ்தூல சரீர மெடுத்தாரென்பது நிச்சயம். ஆதலால் காமனைசெயிப்பது அசாத்தியம்; காமன் ஒரு காலத்திலும் பிறந்ததுமில்லை ஒரு காலத்திலு மிறப்பது மில்லை; அது அனாதியாம். ஆதலால் காமனைக் கொல்லுவதற்கு திருமூர்த்திகளாலும் அசாத்தியமா

மென்பதுசத்தியம். காமன்தான் ஜெகஸ்ரூபம்; காமன் தான் ஜெகத்ஜீவன். காமன் செத்தால் உலகமேது? திருமூர்த்திகளேது? ஜீவர்கள் ஏது? சராசர சீவர்களுக் கும் உற்பத்தி காரணம் காமன். ராகாதி விர்த்திகளில் பதின்மூவர்களில் ப்ரதானியாயும் மஹா பெலமுடைய தாயுமுள்ளதாம் காமனென்று அறிக. ராகத்துவே ஷாதி சம்சாரத்தை அபிவிர்த்தி செய்வதற்கு மோக்ஷத்திற்கு விரோதமாயும் உள்ளதாங்காமன், காலமானதுங்காமன்; கர்மமானதுங் காமன்; மூல மானதுங்காமன்; முக்குணங்களுங்காமன்; தபசிகளு டைய தபசை கெடுப்பதுங்காமன்; சாதுக்களை பெற்றதுங்காமன்; உலகமெல்லாவற்றையும் பெற்றதும் காமன்; அகலியை பெற்றுகலகத்தை உண்டுபண்ணி சம்சாரத்தைக் கெடுப்பதுங்காமன்; கொடுப்பதுங் காமன். இந்தப்படி அடிக்கடி ஜனன மரணாதி சம்சார துன்பங்களை உண்டுபண்ணுவதற்கு முக்கிய காரணம் காமனென்றேயாம்; மற்றிலை என்பதும் நிசசயம். ஆதலால் காமன் மஹா பெலமுடையவனுயும் உல கத்துக்கெல்லாம் பிரதானியாயும் உள்ளதாமென்றும் மேற்கூறிய தாத்பரியம். ஆனாலும் இந்த உலக

நாசத்தின்கண் காமன் நாசமடையுமோ வென்றால் நாசமடையாது. அங்ஙனமெப்படி யெனில் ப்ரம்மப்பிரளயாந்தகாலத்திலும் மூலமாயையோடுகூடி லயமடைந்து சூக்ஷமத்தில் வித்தில் மரம்போலவும் மரத்தில் வித்துபோலவும நிற்விகற்பமாய் பர பிர்ம்மத்தில் லயமடைந்து இருக்கும. ஆனால் மனோலயமடைந்த மஹாத்மாக்களின் பாதத் தியானமான ஞானக்கினியில் காமன் நாசமாய் சாம்பலாகுமென்பது சத்தியம், சந்தேகம் வேண்டாம்.

மனம்:— ஓ ஆண்டவனே! நின்திருவடி மேற்கூறிய நிஷ்கள பிர்மத்திலிருந்தும் பிறந்த காமன் நிஷ்கள பிர்மத்திலே இறந்தாரென்று திருவாய்மலர்ந்தருளியது சரி, சந்தேகமில்லை; ஆனாலும் அந்த காமனுடைய சொரூபமாவது எது? பஞ்சாயுதமாவது எது? வில்லாவதெது? நாணாவது எது? அதனுடைய லட்சணமாவது எது? அதை அனுப்பும் லட்சியமாவது எது? லட்சியார்த்தமாவது எது, அதனுடைய சுபாவீகமாவது எது?

அறிவு:— ஓ மனமே கேள்:— காமனுடைய சொரூபமாவது அசத்துவாசனையோடு கூடிய மனமொன்றுதான்; அதாவது அநேக காமரூபமாயுமிருக்

கும்; அதனுடைய பஞ்சாயுதமாவது பஞ்சேந்திரியமா யுள்ள காது, தொக்கு, கண், மூக்கு, நாக்கு, இந்த ஆயுதங்களஞ்சுமாம். அதனுடைய வில்லாவது புத்தி; அதனுடைய நாணாவது சித்தம்; அதனுடைய சுபாவீகமாவது மாயா அகங்காரம்; அதனுடைய லட்கிய மாவது ஜீவன்; அதனுடைய லட்சியார்த்தமாவது பிரணவமொன்றேயாம்.

ஓ மனமே கேள்:—அதுகளெல்லாம் இந்தப்படி இருக்க இதுகளை எல்லாம் மேற்கூறிய லட்சியார்த்த மான பிரணவசொருபமான ஸ்ரீ சத்குருவின் திருவடி யிலடக்கி சின்னபின்னமாக்கி திருவுளம் பெற்றால் அந்த சத்குருவின் திருவருள் ஞானக்கினியில் மாயா வாசனையோடு கூடிய காமனும் அந்த காமத்தாலுண் டான மாயாவாசனையும் எல்லாம் அடியோடே நசிக் கும்,பிர்மானந்தபதமடையலாமென்பதே மேற்கூறிய தாத்பர்யம்.

ஓ மனமே கேள்:—முன்னம் ஒருகாலத்தில் சிவபெருமான் காமனை சுட்டாரென்றும் புராணங் களில் கூறியது பிராகிருதமாம். ஆனாலும் அந்த காமனைச்சுட்டாரென்பது அகங்காரமான ருத்திரன்; அகங்காரத்தினால் காமனைக்கொல்ல முடியாது; நிச்

சயம்; அகங்காரமிருந்தமட்டும் காமனு மிருக்கு மென்பதற்குச் சந்தேகமுண்டா?

ஓ மனமே கேள்:—அகங்காரத்தை விட்டு சித்தம் பரிசுத்தமாக்கி ஸ்ரீ சத்குருவின் திருவருள் பெற்று பூரணானந்தப்பொருளை யடைந்தால், காம மேது? காலமேது? கலியேது? உலகமேது? எல்லாம் பிர்மமானந்த மயமாய் பார்ப்பார்களென்பது நிச்சயம்.

ஓ மனமே கேள்:— பகவானிடத்தில் சொரூப சந்தோஷமடைந்தாலே பக்திசெய்யக்கூடும்; சத்பக்தி கொண்டு ஏகாந்தபக்தனானால் மனம் லயமடையும். மனம் லயமடைந்தால் அரூபசந்தோஷமாய் ஆமோ கானந்தமாயிருக்கலாம் சந்தேகம் வேண்டாம். முக் குணத்திலும் காமனுடைய கல்யாணமாம்; நிற்குணத் தில் பூரணகல்யாணம்; பூமிமுதல் நாதம் வரையில் மூவுலகமாதலால், உலகமெல்லாம காமரூபமான கர்மரூபமாயும்கடவுளின்சொரூபமாயும்எவனொருவன் காமத்தையும் கர்மத்தையும் தூரத்தள்ளி ஸ்ரீ சத்குரு வின் திருவருள் பெற்ற மஹான்களிடத்தில் காமன் பூரணகாமனாயிருக்குமென்பதுசத்தியம்.இதனுடைய அனுபவத்திலும் உண்மையாக விளங்கும் பொருட்டு அபேட்சையுடைய மாந்தர்கள் ஸ்ரீ சத்குருவின் திரு

வருளான நேதிநேதி மஹாவாக்ய பிரமாணங்களினு லும் அடிக்கடி அத்தியாரோபம் அபவாதமிதுகளினு லும் சந்தேகமெல்லாந் தீரும். இது பரமரகசியமா மென்றுமறிக. எல்லாம் பரிபூரணத்திற் கலந்த தேஜோமய ஜீவபிர்மவைக்கியம்;

மனம்:—ஓ சுவாமி! ஞானிகள் ஞானக்கினி யில் காமனைச் சுட்டாரென்றும், காமமும் கர்ம வினைகளும் விட்டவானுக்கே ஞானம் வரும் என் றும், மேற்கூறி இருக்கிறது. இதுகளிரண்டில் எதை நாம் நம்பவேண்டுமென்று கேட்க,

அறிவு:—ஓ மனமே கேள்:—அஞ்ஞான மிருந்த மட்டும் ஞானம் பிரகாசிக்க இல்லை என்றும், அஞ் ஞானம் நீங்கி விட்டால் ஞானம் சுயம்பிரகாசமாய் விளங்குமென்று மறிக. ஆதலால் முதலாவது அஞ் ஞானம் நீங்கும் பொருட்டு அப்பியாசம் செய்ய வேண்டும். ஞானக்கினியில் சர்வ கர்மவாசனையும் பாபமும் நசிக்குமென்றும், அதற்கு காமமற்றால் கர்ம முத்தியாகுமென்றும், மேற்கூறியது உண்மை தான்; ஆனாலும் முதலாவது காமம் விட்டு கர்ம முத்தியாகும் பொருட்டு முயற்சியுடன் ஒரு சத் குருவை யடுத்து காமமெல்லாம் அந்த குருவடியில்

சமர்ப்பணமாக்கி, குருவடிபூஜை செய்து, பழகி வருவதானால் காமமெலலாம் அந்த பரமாத்மாவிலட ங்கும்; காமமெல்லாம் பரமாத்மாவிலடங்கி விட்டால் கர்மவினை விட்டு பூர்ணக்ஞானம் சுயம்பிரகாசமாய் விளங்கும்; காமமானது கடலாமென்றும், கர்ம்மமா னது அலையாமென்றும், மோக்ஷமானது கரையா மென்றும், இந்த காமவலையை யறுத்து காமக்கடலைத் தாண்டி பிர்ம்மானந்தமாய் இருக்கலா மென்கிற புத்தியும் பக்தி விஸ்வாசமு முடையவானுக்கு ஓடமானது தன் சரீரம்; ஓடக்காரன் குரு; ஆனாலும அந்த ஓடக்காரன் பரம குருபக்தியும் பரமஞானமு முடையவானை ஓடக்காரனாக நம்ப வேண்டும்; ஓடக்காரன பழக்கமுள்ளவனாயும் சுவாதீனமாயிருந் தாலல்லவோ ஓடம் நேர்வழியோடும்; ஓடம்நேர் வழிபோனாலல்லவோ கடலைக்கடந்து கரைசேரலாம. ஆதலால் ஞானானுபவமுடைய சத்குருவை நம்ப வேண்டும்; பூசையின் முடிவானது குருபூசை; எல்லா சங்கல்பத்திலும் தியானத்திலும் முடிவானது குரு பதத் தியானம்; எல்லா கீர்த்தனைகளிலு முடிவானது ஸ்ரீகுருகீர்த்தனம்; எல்லா சாததிரங்களிலும் முடிவா னது குருமஹாவாக்யம் பிரமாணமாம். எல்லாகர்மத் திலு முடிவானது குருதிருவடிக்கு பணிவிடை செய் வதாம். எல்லா தீர்த்தங்களிலு முடிவானது குருவின் பாததீர்த்தமாம்; எல்லாக்ஷேத்திர உபவாசங்களிலும் முடிவானது குருவின்திருவடிக்காவல். எல்லாத்திலும்

முடிவானது குருபக்தி; எல்லா ஞானத்திலும் முடிவானது ஸ்ரீ குருவின் திருவருள் ஞானம். ஆதலால் எல்லாவற்றிலு முடிவானதும் ஸ்ரீ சத்குருவின் திருவடி பூசை செய்வதாம் குருபூசையின் முடிவு. இந்தப்படி அப்பியாசம் செய்து பழகிவருவதானுல், அதோகதியடையாதென்பது நிச்சயம்.

## குருபூசையின் கிரமம்.

மனம்:— ஓ சுவாமி! மந்திரதந்ரதங்களிலும் அநேகவிதமான பூசாவிதானங்களிலும் முடிவானது குருபூசையாமென்றும், திருவாய் மலர்ந்தருளியது சரி, ஆனுலும் அந்த குருபூசை உள்ளபடி செய்யும்பொருட்டு அடியேனுக்குள்ளபடி உபதேசித்தருள வேண்டுமென்று கேட்க,

அறிவு:— ஓ மனமே கேள்:—குருபூசை யென்பதின் தாத்பர்யம் கர்ம்ம முடிவாம். கர்ம்ம முடிவதேகிருதார்த்தம்; அப்படிகர்மம் விட்டு புருஷார்த்தமாகும் பொருட்டு, முன் கையிருப்பிருந்து புண்யபாப மிரண்டும் ஸ்ரீ சத்குருவின் திருவடியில் சமர்ப்பணமாக்கி, சிராசையுடன் உடல்பொருள் ஆவி மூன்றும் தாரைவார்த்து வாக்குமனக்காயங்களினுலும் சோடசோசவுபசாரம் ஆர்க்யபாத்தியாதி அபிவாத்தியங்களினுலும் ஜலகெந்ததீபதூப புஷ்பனைவேத்தியங்களினுலும் அன்னதானம் வஸ்திரதானம் சொர்ணதானம் முதலான தானதர்மமங்களைக்கொண்டு இந்தப்படிசிரத்தாபக்திவிஸ்வா

சத்துடன்நிஷ்காமமாய் குருபூசைசெய்து பழகிவருவதானால் இருவினையும் அடியோடே நசிக்கும். இருவினையும் இருவாசனையும் அடியோடே நசித்தால் ஜீவன் முத்தியடையலாம்; ஆனாலும் மேற்கூறிய குருபூசை செய்வதும் கர்மம்; செய்வது கர்மேந்திரியத்தின் தொழில் கர்மேந்திரியமடக்கு வதாம் குருபூசையின் பலன்; கர்மேந்திரியம் அடக்கமானால் குருபூசை வேண்டாம்; குருபூசையின் பயனாவது அந்தக்கரணம் நான்கும் இந்திரியங்கள் பத்தும் அடக்கமானால் அதுவே குருபூசையின் முடிவு; இதின்பயனாவது சத்தியமாயும் நித்தியமாயு முள்ள பிரம்மானந்த பதமடைவதாம்.

இதைக் கேட்ட மனம் ஓ சுவாமி! தாசகுண மிகுதியாய் இந்தக் கலியுகத்தின்கண் அநேக ஜன்மங்கள் மகிமையுடைய வேதாந்தநூல்களை முகபாடம் படித்தும், கூட்டங்கூடி, ஆத்மாவானது ஏகமென்றும், துவிதமென்றும், குதர்க்கம் பேசி, ஒன்றுக்கொன்று சண்டையிடிக் கக்காரணம் என்னவென்று, கேட்க, அறிவு கூறியது.

ஓ மனமே கேள்:—ஆத்மாவை மறைக்கப்பட்டது அஞ்ஞானதி மும்மலங்களுமாம்; அந்த மும்மலங்களுமற்று, ஸ்ரீ சத்குருவின் திருவருள் பெற்ற மகான்களை அத்வைதிகளென்றும அறிக. அதானது அனாத்மவஸ்துக்களாயுள்ள சத்தாதிவிஷயங்களான இந்திரியங்களும் அநேக சங்கல்ப விகல்பத்தோடு

கூடிய அந்தக்கரணமும் அடக்கி மனோலயமடைந்தால், அந்த மகான்கள்தான் குணாதீதப்பொருளாயும் எதார்த்தக்ஞானிகளாயும் ஏகமென்றும் துவிதமென்றும் பிடிவாதம் விட்டவர்களாயும், உள்ள மகத்துக்களுக்கு, ஆத்மாவானது ஏகம். இதைத்தவிர சத்தப் பிரமாணங்களினாலும், வாக்கு மனக் காயங்களினாலும், ஆத்மாவை அறியக்கூடுவதல்ல என்கிற மகா வாக்கியப் பிரமாணங்களே சத்தியம்; சத்தப்பிரமாணங்களுக்குக் காரணம்—வாக்கு, நாக்கு இந்த இரண்டு விசேஷங்களுமாம்; இதுகளை உண்மையாக நம்பிக்கொண்டிருப்பது மனம் ஒன்றேயாம்; அத்வைதிகளான மகத்துக்கள் இதுகளை அனாத்ம வஸ்துக்களாம் என்றும் அறிவார்கள்.

ஓ மனமே கேள்:—இந்த உலகம் பொய்யென்றும், வாக்கு மனக் காயங்களைக்கொண்டு பேசித் திரிவோர்களும் பொய் ஞானிகளாம் என்பதற்குச் சந்தேகம் உண்டா? ஏனென்றால் வாக்கு மனக்காயங்களாலும் எட்டாத வஸ்து ஆத்மாவாதலால் பொய்யான இந்திரியங்களினால் சொன்ன வாக்கியங்களெல்லாம் பொய். பொய் என்பதற்குச் சந்தேகமில்லை. ஆதலால், இந்திரியங்களும் மனதும் அடக்கி அருள் பெற்று, ஆத்மாவில்ஐக்கியமாய், கண்மூடி, மௌனியாய் சமாதியடைவதே மெய்யான வேதாந்தம்.

முற்றிற்று.

S. B. P. N. 20—535

# பிழை திருத்தம்.

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| 5 | 7 | பரிசுத்தமாகி | பரிசுத்தமாக்கி |
| 9 | 1 | சப்தமாத்திரமாயும் | சப்தாமாத்திரமாயும் |
| ,, | 5 | ... | இனி |
| 10 | 20 | சற்குரு கிடைக்கும் | சற்குருவை கிடைக்கும் |
| ,, | ,, | சற்குரு கிடைத்தால் | சற்குருவை கிடைத தால் |
| 13 | 12 | மமதையும் | அகமமதையும் |
| 14 | 2 | வேதாந்த | விவேகானந்த |
| ,, | 15 | மமதையும் | அகமமதையும் |
| 19 | 9 | ஜீவபரம் | ஜீவபாஜக்கியம் |
| 20 | 6 | பின்னும் | பின்னம் |
| 28 | 12 | வியபசாரம் | விபசாரம் |
| 35 | 8 | பரமாத்துவ | பாமரத்துவ |
| 36 | 18 | வேண்டுவ வசியம் | வேண்டுவதவசியம் |
| ,, | 21 | அதற்கு ஞானம் | அதற்குமுன்னே |
| 39 | 21 | வித்திரங்களெல்லாம் | விசித்திரங்களெல்லாம் |
| 44 | 14 | காமமானது | கர்மமானது |
| 46 | 8 | அன்புற்கு | அன்புற்று |
| 47 | 7 | யிரண்டாகக் | யிரண்டறக் |
| 48 | 16 | சிற்ப்பிரகாசத்தியானல் | சிற்பிரகாசத்தினல் |
| 49 | 12 | ஜீவருய | ஜீவருய் |
| ,, | 13 | பாபிகளாய் | போகிகளாய் |
| 54 | 18 | கிஷ்காம்ம | கிஷ்காமமாய் |
| 58 | 11 | பெய்வது | செய்வது |

# பிழை திருத்தம்.

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| 63 | 2 | இறைவனருளாலரிவதல்லாம | இறைவனருளாலறிவதாம் |
| ,, | 18 | பெக்த | பெந்த |
| 64 | 8 | ஆணவம் | ஆபரணம் |
| 65 | 7 | மனடந்தது | மடைந்தது |
| 68 | 17 | மூன்ரும் | பதிமூன்ரும் |
| 70 | 2 | கிரூமி | கிருமி |
| 72 | 17 | லெக்ஷமணவாவது | லெக்ஷணமாவது |
| ,, | 20 | ... | ஜாக்கிரு |
| ,, | 21 | பாலெனமமாயும் | பாலென பாமாயும் |
| 73 | 7 | சுவபாவமான | அபவாதமான |
| ,, | 9 | கிருஷ்டி | சிருஷ்டி |
| 74 | 5 | ... | அறியக்கூடியதாயும் |
| 76 | 2 | வேதேதி | வேதாதிகளும் |
| 80 | 13 | அகலியை | அதிற்கலியை |
| 87 | 13 | ஜன்மங்கள் | ஜனங்கள் |
| ,, | 17 | சண்டையிடிக்க | சண்டைபிடிக்க |
| 88 | 10 | விசேஷங்களுமாம் | விடயங்களுமாம் |